சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

ஸ்ரீ வெள்ளை பிள்ளையார் திருவுருவம்

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை



திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர்
'கயிலைமாமுனிவர்' ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்**
**சுவாமிகள் அவர்கள்**

'ஈயார் தேட்டை தீயார் கொள்வர்' என்பது நீதிநூல்கள் அளித்த ஔவையாரின்வாக்கு. செல்வத்தை அறநெறியான் ஈட்ட வேண்டும். நல்ல நுகர்வுகட்காகச் செலவிடவேண்டும். இறை நெறிப்பணிகட்குச் செலவிடுவது மறுமைக்கும் இம்மைக்கும் மகிழ்ச்சி தரும் நன்முறையாகும். வள்ளுவப்பெருந்தகையும்,

''தென்புலத்தார் தெய்வம்
விருந்துஒக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத் தாறோம்பல் தலை ;

என்கிறார். செல்வம் தனக்கு மிஞ்சுவது உண்டு. தருமத்துக்கு மிஞ்சுவது கிடையாது.

தன் நுகர்ச்சிகளை மிதப்படுத்திக்கொள்வதற்கு நுகர்ச்சிகளின் அநித்யத்தை உணர்வது அவசியமாகும்.

உலக மனிதர்கள் விசித்திரமானவர்கள். செல்வத்தை என்ன செய்வது என்ற திட்டமிட்ட கொள்கை இருப்பது கிடையாது.

மகாத்மா காந்திஜி அவர்கள் தன் வாழ்க்கை விரதங்களாக பதினொரு விரதங்களைக் கொண்டிருந்தார். அவற்றை உலக மாந்தருக்கும் அறிவுறுத்தினார். அதில் சேமியாமை என்பதும் ஒரு சிறந்த விரதமாகும்.

அடுத்த சந்ததியினர் செல்வம் ஈட்டச் சக்தியற்றவராயின் அவர்கட்கு நாம் ஈட்டிய செல்வத்தில் ஒரு பகுதியை வைப்பாகத் தருதல் நியாயமாகும். அப்படிக்கு இல்லாமல் நம்மினும் திறமையாளர்களாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்க அமைந்த சந்ததியினருக்கும் நம் நுகர்வுகளைக் கூடச் சுருக்கிச் சேர்த்துவைக்கும் நிலையை மகாத்மா காந்திஜி அவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை.

சேமிப்பில் எத்தனையோ கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் கூட சேமித்ததைக் காக்கும் முறையில் புதைத்து வைப்பதை அனைவரும் எதிர்க்கத்தான் செய்வார்கள்.

வங்கி போன்ற நவீன வசதிகள் இல்லாத அந்தக் காலத்தில் சேர்த்த செல்வத்தைப் பலரி புதைத்து வைத்தார்கள். மரண அவசரத்தில் செல்வம் புதைக்கப்பெற்ற இடத்தைச் சொல்ல முடியாமற் போவதும் உண்டு.

முற்காலத்திலும் திருடர்கள் இருந்தார்கள். அவர்கள் புதையல் இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதற்காக ஒரு மையைப் பயன்படுத்தினார்கள். துர்த்தேவதைகளின் உதவியினால் அந்த மை தயாரிக்கப் பெறுவது. அந்த மை புதையல் இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுக்கும். கள்வர் அதைக் கவர்வர். புதைத்தவரின் அறியாமையைக் காட்டிலும் கள்வரின் செயல் கொடுமையானதாகும்.

மேகக் கூட்டங்கள் வற்றாமல் நீர்வளம் தருவதனால் இனிய பலாமரங்கள் தழைக்கின்றன. வேரில் பழுக்கின்றன. பலாக்கனிகள் நிலத்தில் கிடைக்கின்றன.

பலாக்காய்களைப் பறித்து வேப்பங் குச்சி முளையடித்துப் பழுக்க வைப்பது பஞ்சகாலத்தின் பழக்கம். கனிய வைத்த இந்தக் கனிகளுக்கு மணம் குறைவே. தானாகப் பழுத்து விழும் கனிகளின் மணமே அலாதியானது.

குரங்குகளும், தானாகப் பழுத்த பலாக் கனிகளை மணத்தினால் அறிந்து கொள்ளும். பழுத்த பலாவின் முட்கள் பெரும்பாலும் கருகிப் போயிருக்கும். எனவே குரங்குகள் எளிமையாக அவற்றை நகத்தால் கீறி உள்ளிருக்கும் பொன் போன்ற சுளைகளை எடுத்துக் கொள்ளும்.

சோலைகள் சூழ்ந்த மதிலுயர்ந்த அழகிய திருவாரூரில் குரங்குகள் பலாக் கனிகளின் சுளைகளை எடுக்கும்: இந்த இனிய காட்சி கள்வர்கள் புதையலை எடுக்கும் கொடிய காட்சிக்கு ஒப்பானதாகும்.

இவ்வொப்புமைக் காட்சியை ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் விரிவாகச் சொல்லி அத்தகைய இயற்கை வளம் செறிந்த கமலை என்னும் திருவாரூரைப் புரக்கும் 'மாசிலாமணியாகிய ஞான சம்பந்த!' என்று விளிக்கிறார்:-

மழைக்குலம் தழைப்பத் தழைத்த தீம்பலவின்
வேரிடைப் பழுத்துப் பாரினுள் கிடந்த
முள்புறக் கனிகள் விட்புஉறக் காண்டலும்
சிறுகண் மந்தி குறிவழிச் சென்று
கீண்டுபொன் சுளைபல தோண்டுவது அம்ம
முற்பகல் ஒருவர் பொன்குடம் நிரம்பப்
புதைத்தனர் வைத்த நிதிக்குழாம் அனைத்தும்
வஞ்சகம் பழகும் அஞ்சனக் கள்வர்
கண்டுகண்டு எடுக்கும் காட்சித்து அன்ன
தண்டலை வளைஇத் தடம்மதில் உடுத்த
தேசுஉலாம் கமலைத் திருநகர் புரக்கும்
மாசி லாமணி ஞானசம் பந்த!

[மழைக்குலம் – மேகக் கூட்டம்; தீம் - இனிய; பலவு - பலா; பாரினுள் - தரையுள்; முள்புறக் கனி – புறத்தே முட்களைக் கொண்டுள்ள பலாக்கனி; விட்பு-வெடிப்பு; காண்டல் - காணுதல்; மந்தி – பெண்குரங்கு, மந்தி என்பது பெண்குரங்கைக் குறிக்கும் சொல்லாயினும் இங்கு குரங்கு என்னும் பொதுப் பொருளிலேயே குறிக்கப் பெற்றுள்ளது. கீண்டு – கீறி; குழாம் - கூட்டம். இங்குப் பல்வகைச் செல்வப் பொருள்களைக் காட்டுகிறது. அஞ்சனம் - மை; தண்டலை - சோலை; தடம்மதில் - பெரியமதில்; தேசு – ஒளி, அழகு; கமலை - திருவாரூர்; புரக்கும் - காக்கும்; அம்ம - வியப்பிடைச் சொல்; அன்ன - போல. உவம உருபிடைச் சொல்]

ஆரூரின் வளத்தைப் பலாக் கனிகள் குரங்கும் உண்ணுமாறு நிறைந்தும் பல்கியும் உள்ளதாகக் கூற வந்த ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள், சேமிப்பில் இருந்த அறியாமையையும் சுட்டுகிறார்கள்;

— சிவ சிவ

# தமிழகத்தின் தலைநகரில்

தமிழ் நாடு சைவவேளாளர் சங்கத்தின் சென்னைக் கிளை 26 - 1 -83 காலை 10மணி அளவில் தியாகராய நகர், 'தருமபுர மடத்தில்' தொடங்கப்பட்டது. 'திருமுறை கலாநிதி' சபாரத்தின தேசிகர் தேவார இன்னிசையுடன் விழாத் துவங்கியது. விழாவில் பங்கு கொண்டோர் அனைவரையும் சென்னை நகர அமைப்பாளர் திரு. பா. குஞ்சிதபாதம் பிள்ளை M. A., வரவேற்றார்.

மாநிலத்தலைவர் திரு. காங்கேயன் பிள்ளை அவர்கள் தலைமைஉரையில், தருமபுர சந்நிதானம் அவர்களின் ஆசியும், கயிலைமாமுனிவர் அவர்களின் ஆதரவும் இச்சங்கம் இந்த அளவு வளரக் காரணம் என்றும், சங்கம் மென்மேலும் வளரச் சைவர்கள் அனைவரும் திரு மடங்களுக்கு மிகவும் விசுவாசம் உடையவர்களாக இருத்தல் வேண்டும் எனவும் கூறினார்கள்.

அடுத்துப் பேசிய தஞ்சை மாவட்ட செயலர் திரு. எஸ். திருநாவுக்கரசு, M. A., அவர்கள் சங்கத்தின் தோற்றத்தினையும், தஞ்சையை அடுத்து தென் ஆற்காடு, வட ஆற்காடு, திருநெல்வேலி, இராமநாத புரம், மதுரை ஆகிய மாவட்டங்களில் பரவி உள்ள விவரத்தினையும், சங்கத்தின் சாதனைகளையும் எடுத்துக் கூறினார்கள். சங்கத்தின் வாயிலாக 10 கல்லூரி மாணவர்களுக்கு ரூ. 150/- வீதம் உதவிப் பணம் வழங்கப்பட்டது என்றும், 2 திருமணங்கள் நடத்தப்பட்டன என்றும், பள்ளி மாணவ மாணவியருக்குப் புத்தகங்களும், தீபாவளி போன்ற விசேட காலங்களில் சீருடையும் வழங்கப்படுகிறது என்றும், தற்காலிக வேலைவாய்ப்பு 20க்கு மேற்பட்டோருக்கு வழங்கப் பட்டுள்ளது எனவும் எடுத்துக் கூறினார்.

விழாவில் திரு. விஸ்வநாத பிள்ளை, முன்னாள் முதல்வர் ஏ.வி.சி. கல்லூரி, மாயூரம், திரு. சுவாமி வெங்கடாசலம், ஆலய அதிகாரி, டாக்டர். திரு. துரை, திருமதி. சாந்தி ஆகியோர் உரையாற்றினர். கீழ்க்கண்ட கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன.

திரு. உமாமகேஸ்வரன் நன்றி கூறினார்.

(1). திருமண தொடர்பு கமிட்டி:- திரு. பா. குஞ்சிதபாதம் M. A. ஏ.ஜி. ஆபீஸ், தேனாம்பேட்டை, சென்னை, (2) வேலை வாய்ப்பு கமிட்டி:- திரு. டாக்டர் துரை M.S.c., Ph.D., 65/1, ஹேரிங்டன் சாலை, சென்னை-30., (3) கல்வி, தொழில் நுட்பக் கல்வி, மேற்படிப்பு கமிட்டி:- திரு. எஸ். சிதம்பரம், M. S. c., 12, 4th St, ரங்கராஜ புரம், சைதாப்பேட்டை, சென்னை-15., (4). வீடு வாடகை அல்லது சொந்தமாக அமைத்தல்:- திரு. ச. உமாமகேஸ்வரன் முருகேச நாயக்கர் மாளிகை, திருவல்லிக்கேணி, சென்னை-5.

# நூல் நிறை

## சிவஞான பூஜாமலர் (துந்துபி)

பதிப்பாசிரியர்: ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா; பக்கம் : 14 + 306; வெளியீடும் கிடைக்குமிடமும் :– ஆங்கிரச S. வேங்கடேச சர்மா; 5. டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு, மேலமாம்பலம், சென்னை - 600 033; விலை : ரூ. 5-00; அஞ்சலில் – ரூ. 6-50].

சொல்வன்மை மிக்க திரு. S. வேங்கடேச சர்மா அவர்களின் எழுத்து வன்மையும், பதிப்புத்துறை அனுபவமும் இம்மலரில் வெளிப்படுகின்றன.

தருமையாதீன குருமுதல்வர், ஸ்ரீ காசிமடத்துத் தலைவர், ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் ஆகிய சமயத் தலைவர்களின் வாழ்த்துரைகள் மலரின் முதற்கண் அணிசெய்கின்றன.

புறம், கலி, மணிமேகலை முதலான நூல்களில் பரந்து கிடக்கும் சைவம் தொடர்பான கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

ஆங்கில நாடகாசிரியர் செகப்பிரியரின் கருத்துகள் சைவ சித்தாந்தச் செம்பொருளோடு ஒருபுடை வைத்து ஒப்புநோக்கப் பெற்றுள்ளன.

சித்தாந்த, காச்மீர சைவ நெறிக் கூறுகள், சிவபரத்துவம், இறை இலக்கணம், சிவநாம ஜபம் ஆகியவை அழகுற விளக்கம் பெறுகின்றன.

மற்றும் அஷ்டகம், ஸ்தோத்ரம் முதலியவை விளக்கப் பெறுவதோடு, புராணக் கதை, புகழ்மாலை முதலியனவும் இடம் பெறுகின்றன.

மஹா பிரதோஷ தரிசன மகிமையும், ஆளுடைய பிள்ளையின் அரிய பாசுர விளக்கமும் காட்டப் பெறுகின்றன.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் திருக்கயிலைப் புனிதப் பயணக் குறிப்புகள் நிரல்படுத்தப் பெற்றுள்ளன; இனி காணச் செல்வோர்க்கும், காண முடியாதார்க்கும் 'கயிலை' தரிசனம் கண்ட உணர்வு இக்குறிப்பினைப் படிப்பார்க்கு உண்டாகும்.

சீரிய படைப்புகளின் தொகுப்பாகிய இந்நூல் விற்பனைத் தொகை தேவார விளக்கவுரை நூல்களின் பதிப்பிற்குப் பயன்படுத்தப்பெறும் என்பது குறிப்பிடத்தக்கது.

## ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம்

### பொங்கல் மலர்

[1983 - ஜனவரி வெளியீடு; 36+8; கிடைக்குமிடம்: ஸ்ரீ இராம கிருஷ்ண விஜயம் காரியாலயம், ஸ்ரீராமகிருஷ்ணமடம், மயிலாப்பூர், சென்னை 600 004]

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்-பொங்கல் மலர் சிறப்பான கட்டுரை, கதைகளுடன் அழகுற அமைந்துள்ளது.

பொங்கல் விழா, ஐயப்ப வழிபாடு ஆகியவை விளக்கப் பட்டுள்ளன.

ஆன்மிக உரையாடல், வினா-விடைப் பகுதிகள் சிந்தனைத் தெளிவில் கனிந்தவையாக உள்ளன.

கி. வா. ஜ. அவர்கள் அற்புதத் திருவந்தாதியின் 95-ஆம் பாடற் கருத்தை விளக்கியிருக்கிறார்.

வாரியார் சுவாமிகள் 'வள்ளலி'ன் இலக்கியச் சிறப்பை வாரி வழங்குகிறார்.

சிறப்பான, சமய, இலக்கிய வெளியீடு; ஆத்திக அன்பர்கள் அனைவரும் படிக்க வேண்டிய இதழ் இது.

## மூத்த பிள்ளையார் திருச்சதகம்

[இயற்றியவர்: கவிஞர். கே. பி. அறிவானந்தம் : பக்கம்: 64. விலை : ரூ. 4 வெளியீடும் கிடைக்குமிடமும் :- எந்தைபிரான் பதிப்பகம், குன்றத்தூர், சென்னை - 600 069].

'கணபதியென்னும் களிற்றின்' அருட் செயல்களையும், திருவுருவ நலத்தையும் புனைந்துரைக்கும் பாமரலைகளாக இந்நூல் அமைக்கப் பட்டுள்ளது.

சிறப்பான கருத்துநலம், ஏற்ற சொன்னயம், ஓசையினிமை ஆகியவை இயைந்துள்ளன.

'குறள்', 'கோவையார்' போலப் பிறர் அளிக்க அமைவதுதான் 'திரு' எனும் அடைமொழி; ஆக்கியவரே கொடுத்தல் மரபுநெறியா? ஒரு சில விலக்குகள் (Exceptions) ஏனைய சதகங்கள் பதினன்குசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தத்தில் அமைந்திருக்க, இந்நூல் கலி, ஆசிரிய இனங்களிலும். கட்டளைக் கலித்துறையிலும் பாடப் பெற்றுள்ளதே? — சிறப்பான முயற்சி; பணி பாராட்டிற்குரியது.

பனசை சுவாமிநாதன்.

# சிதம்பர க்ஷேத்ர சர்வஸ்வம்

## பகுதி 2

[தொகுப்பு விளக்கவுரை ஆசிரியர்: சதுச் சாஸ்த்ர சிரோமணி, பண்டிதராஜ சோம சேது தீக்ஷிதர். வெளியீடும் கிடைக்கும் இடமும்: ஸுஹ்ருத சபா, 72, தெற்குரதவீதி, சிதம்பரம் 608 001. பக்கம் 8+40+312; படங்கள் 4+4 விலை ரூ 100]

1977 ஆம் ஆண்டில் சிற்றுரையுடன் தேவநாகரி லிபியில் இவ்வாசிரியராலேயே வெளியிடப் பெற்றது சிதம்பர க்ஷேத்ர சர்வஸ்வம். இரண்டாம் பகுதியாகிய இது ஸ்ரீமந். நடராஜ மூர்த்தியின் உத்சவப்ரயோகமும் ஸ்ரீ கந்தகணேச, சிவகாமசுந்தரி உத்சவப்ரயோகங்களும், ப்ராயச்சித்தாபிஷேக பிரயோகமும், பிரதிஷ்டா சூத்ர பிரயோகச் சுருக்கமும் கொண்டது. மூலம் பதஞ்சலி மாமுனிவருடையது ஆகும்.

தேவநாகரி லிபியில் உள்ள நூலின் முழுப்பகுதிக்கும் சாரமாக முகவுரை (34 பக்கங்கள்) தமிழில் உள்ளன.

உற்சவங்கள் பூஜைக் கிரமங்கள் ஆகியவை பற்றியது இந்நூல்.

உற்சவங்களுக்குப் பந்தர்க்கால் முகூர்த்தம் முதல் விடையாற்றி வரை ஒவ்வொரு கட்டத்திற்கும் இலக்கணம் வகுப்பது இந்நூலின் தன்மையாகும்.

மனம் போனபடி பூஜைக் கிரமங்கள் நடைபெறுவதைத் தடுப்பதே இந்நூலின் நோக்கம் என்ருல் மிகையாகாது.

கர்த்தாக்களின் அவசரத்துக்காகவாவது யாருக்குப் புரியப் போகிறது என்ற நோக்கிலாவது, கிரமங்களைக் குறைப்பதோ வேகப் படுத்துவதோ புண்யமாகாது.

இந்நூலின் பிரயோகங்களிலிருந்து எடுத்த செய்திகள் கற்போருக்கு வியப்பை அளிக்கின்றன. (உ. ம்.) மகாபிஷேக சாமான்கள்; இருபது பொருள்களின் அளவுகளும் அப்படிச் செய்வதின் பலன்களும் கூறப் பெற்றுள்ளன.

பதஞ்சலியின் பிரதிஷ்டாசூத்திரம் பாதாஞ்சல பிரதிஷ்டா சூத்திரம் எனப்படும்; அதைச் சுருக்கி எளிய முறையில் பிரம்ஹஸ்ரீ

சோமசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் பிரதிஷ்டா சங்கரஹம் என்ற நூல் செய்தார்கள். அதில் கும்பாபிஷேகம் செய்தல் பற்றிய அற்புதமான செய்திகள் முழுமையாக உள்ளன. அவையும் அவற்றின் தமிழ்ச் சுருக்கமும் இந் நூலில் உள்ளமை தனிச் சிறப்பாகும்.

அரிய முயற்சியுடன் இப்பதிப்பை வெளிக்கொணர்ந்த ஆசிரியரும், ஸீக்ருத சபாவும் பாராட்டுக்கும் மரியாதைக்கும் உரியதாகும். யுகவறட்சிகள் நம் தத்துவ விருட்சங்களைப் பட்டுப்போகச் செய்யும் அபாயம் இருக்கும் இந்தக் காலத்தில் இத்தகைய நூல்வெளியீடுகள் மிகமிக அவசியமாகும். மண்டலபூஜா விளக்கப்படம் முதலியன ஆச்சர்யமான விஷயமாகும்.

## திருப்பணி கொள்ளும் திருநாரையூர்

தென்னார்க்காடு மாவட்டம் காட்டுமன்னார்குடி வட்டம் திருநாரையூர் அருள்மிகு சுயம்பிரகாச சுவாமி ஆலயத்திருப்பணி வேலை திருப்பனந்தாள் கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அருளாசியினால் துன்மதி ஆடு தைமீ 30உ [12—2—82] அன்று துவக்கப்பெற்று சிதம்பரம் திரு G. வாகீசம்பிள்ளை அவர்களைத் திருப்பணிக் கமிட்டி தலைவராகக்கொண்டு நடைபெற்றுவருகின்றது; அன்பர்கள் திருப்பணிவேலைக்குத்தாராளமாக நன்கொடை அளித்து ஸ்ரீ பொல்லாப்பிள்ளையாரின் அருளுக்குப் பாத்திரராகக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

S. திருநாவுக்கரசு பிள்ளை,
பொருளாளர்,
திருப்பணிக்கமிட்டி,
9, கனகசபைநகர், சிதம்பரம்.



# சித்தாந்த சாத்திரங்கள்

## மு. அருணாசலம்

### திருக்களிற்றுப்படியார்

நூலைப் பற்றிப் பேசும்போது ஒரு செய்தியைச் சொல்லலாமென்று தோன்றுகிறது. திருக்களிற்றுப்படியார் பாடிய உய்யவந்த தேவர் ஆட்டு வாணிகர் குலம் என்பது வரலாறு. சைவ சமயத்தில் புலால் நீக்கிய உணவு கொள்ள வேண்டுமென்பது ஓர் அடிப்படைத் தத்துவம். இதை வைத்தே உலக வழக்கில் 'சைவர் புலால் உண்ணாதவர்; அசைவர் புலால் உண்பவர்' என்ற ஒரு வழக்காறு நிலவி வருகிறது. இந்தத் தொடர்பில் சைவர் என்ருல் சிவபெருமானை வழிபடுபவர் என்ற பொருள் இல்லை. பொதுவாகத் தமிழ்நாட்டில் சைவர் என்போர் தம் உணவு முறையால் சிறப்புடையோர். இது பொது நிலை.

ஆனல் சிறப்பு நிலைகளும் உண்டு. சிவஞானியருக்கு, சிவபெருமான் அருளை நாடி நிற்பவர்க்கு, தம்வசம் இழந்து பரவசமாய் நிற்பவர்க்கு எப்படிச்சாதி வேற்றுமை இல்லையோ அப்படியே உணவு முறையும் அவர்களைப் பாதிப்பதில்லை. இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டுக்கள் 63 நாயன்மார் வரலாற்றில் கண்ணப்ப நாயனர் வரலாறும் அதிபத்த நாயனர் வரலாறும் ஆகும். கண்ணப்பர் கொலைத் தொழிலே புரிந்து வாழும் வேடர் குலத்தில் பிறந்தவர். பன்றியை வேட்டையாடி அதன் இறைச்சியை நெருப்பில் வதக்கி நாவினல் பதம் பார்த்து அதைக் கொண்டுபோய்ச் சிவபெருமானுக்குத் திருவமுதாக ஊட்டியவர். அவருடைய திருத் தொண்டைக் கண்ட சிவகோசரியார் என்ற சிவாசாரியர் பேரதிர்ச்சியும் வியப்பும் ஒருங்கே அடைந்தார்.

அதிபத்த நாயனர் மீனைப் பிடித்து விற்று வாழ்ந்தவர். தினமும் ஒரு மீனைச் சிவபெருமானுக்கு அர்ப்பணித்துக் கடலில் விடுவார். நெடுநாள் மீனே கிடைக்காமல் பட்டினியால் வாடியிருந்தபோது ஒரு நாள் கிடைத்த பொன் மீனையும் சிவார்ப்பணம் என்று கடலில் விட்டு வெறுங்கையோடு பட்டினியாக வீடு திரும்பியவர். உயிர்க் கொலை புரிந்த இவ்விருவர் தொண்டும் சிவபெருமானுக்கு ஏற்புடைத்தாயிற்று.

இராமாயணத்தில், கங்கைக் கரையில் குகன் இராமனுக்கு இறைச்சியைக் கொண்டு வந்து அமுது படையலாக அளித்த வரலாறும் இங்கு ஒப்பு நோக்கிச் சிந்திக்கத் தக்கது;

திருக்களிற்றுப் படியார் பாடிய திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனுர் ஆட்டு வாணிகக் குலத்தில் பிறந்தவர். ஆட்டு வாணிகர் என்றால் பலர் நினைக்கிற மாதிரி ஆட்டு வியாபாரம் செய்பவர் என்ற பொருளல்ல; இப்படியிருந்தால் இடையர், யாதவர் என்று பெயர் சொல்லியிருக்கக் கூடும். ஆட்டிறைச்சியை வியாபாரம் செய்பவர் என்றே பொருள். இச் செய்கை தாழ்ந்த செய்கை. ஆகவேதான் அன்றிருந்த உலகத்தார் இவரைத் தாழ்வாகக் கருதி இவரது நூலை ஏற்கத் தயங்கினர்கள். அதனால்தான் இவரது மனப்பக்குவத்தை அங்கிகரித்த நடராசப் பெருமான் அதை உலகத்தாரும் உணரும் பொருட்டு ஒரு திருவிளையாடல் புரிந்தார். அவர் மதுரையில் கல்யானைக்குக் கரும்பு அருத்தியவர் அல்லவா? இங்கும் பஞ்சாக்கரப் படியிலிருந்த கல்யானை இந்நூலின் சுவடியை தன் துதிக்கையால் எடுத்து நடராஜப் பெருமான் திருவடியில் வைத்தது. அதனால் உலகத்தார் இந்நூல் பெருமானுக்கு எவ்வளவு உவப்பானது என்பதை உணர்ந்தார்கள்;

இங்கு ஆட்டு வாணிகர் என்றால் ஆட்டிறைச்சி வியாபாரம் என்று நாம் பொருள் கொண்டதற்கு ஆதாரம் மணிமேகலை என்ற பெருங் காப்பியம். அந்நூல் கச்சிமாநகரில் நிகழ்ந்த தொழில்களைச் சொல்லிக் கொண்டு வரும் போது, ''பன்மீன் விலைஞர்......மைந்நிண விலைஞர்'' என்று கூறுகிறது. மை-ஆடு, நிணம்-இறைச்சி, ஆக்வே இவர்கள் ஆட்டு வாணிகர் என்று குறிப்புரை சுட்டிக் காட்டுகிறது. பக்தி முதிர்வினால் ''ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'' என்று அப்பர் சுவாமிகள் இந் நூலுக்கு நானூறு ஆண்டுகட்கு முன்பே பாடினர். அந்தப் பக்தி முதிர்வு இந்த உய்யவந்தாரிடம் காணப்பட்டது. இது பெருமானுக்கும் உவப்பானது என்ற நிலையைக் காட்டவந்ததே இந்த வரலாறு.

திரு உந்தியார் போல இந்த நூலுக்கும் முதலில் திரு என்ற அடையும், முடிவில் ஆர் என்ற விகுதியும் இட்டு வழங்குவது இந் நூலிடத்துச் சைவப் பெரு மக்களுக்கிருந்த பெரு மரியாதையைக் காட்டும். உந்தியும் களிறும், சிவஞான போதமும் சிவஞான சித்தியும் போல, சூத்திரமும் வியாக்ஞானமுமாக அமைந்துள்ளன;

அவை போல இவையும் குரு சிஷ்ய பரம்பரையில் எழுந்தவை இந்த நிலையை இவ்வாசிரியரே குறிப்பிடுவது முன்னரே காட்டப் பட்டது. ஞான பரம்பரையில் வந்த பிற்கால அடியவர்கள் பலர் இந்த நூலைப் புகழ்ந்து பாடல் செய்திருக்கிறார்கள். ஒன்று தரும புரத்தில் வாழ்ந்த பேரறிவாளரான வெள்ளியம்பலவாண தம்பிரான் சுவாமிகள் திருக்குறளுக்கு எடுத்துக் காட்டாக தாம் செய்த குறள் வெண்பா நூலாகிய முதுமொழி மேல் வைப்பு என்ற வெண்பா நூலில் 75 ஆம் பாடலில் இந்த நூல் வரலாற்றைக் குறிப்பிடுகிறார்.

பண்டு களிற்றுப் படிமருங்கு வைத்த செழுந்
தண்டமிழை அம்பலவர் அகமகிழ்ந்து — கொண்டமையால்
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு;

அருமையான ஒரு திருக்குறளுக்கு களிற்றுப் படி வரலாற்றை இவர் பயன் படுத்தியிருப்பது பெரிதும் உணர்ந்து போற்றத்தக்கது; இவரது காலம் சுமார் கி-பி 1700க்கு முன் பின்னாக இருக்கும்.

இவருக்கு 50 ஆண்டு பிற்பட்டு வந்த தருமபுரம் சிவானந்த முனிவர் என்பவர் தாம் பாடிய சம்பிரதாய தீபம் என்ற நூலின் 93ஆம் பாடலில் திருக்களிற்றுப்படி கூறும் அனுபவப் பொருள் ஒன்றை எடுத்துக் காட்டுகிறார். பாடல் பின் வருவது:

திருச்சிலம் போசை ஒலி வழியே சென்று
நிருத்தனை நீ கும்பிடென்றார் நேயத்து—இருத்தும்
திருக்களிற் றுப்படியார் சேமத்துச் சொன்னார்
குருக் கடைக்கண் ணால் அறிந்து கொள்.

முந்திய பாடல் போல் இந்தப் பாடலின் பொருளை எளிதில் உணர வியலாது. அவரவர் ஆன்மாவில் நடராஜப் பெருமானுடைய திரு நடனத்தைத் தரிசித்து அவனுடைய திருச்சிலம்போசை ஒலி வழியே சென்று நிருத்தரைக் கும்பிடுதல் அனுபூதிமான்களுக்கே சாத்தியம்; உய்ய வந்த தேவர் இருவரும் அனுபூதிமான்கள்.

இப்பாடலின் கருத்து, குருவின் உபதேசத்தால்தான் திருக்களிப்படியார் கூறும் மெய்ப்பொருளை உணர்தல் கூடும் என்பதாகும்.

கி. பி 1488 இல் சிவப்பிரகாசத்துக்கு உரை எழுதிய மதுரைச் சிவப்பிரகாசர் உள்ளிட்ட உரையாசிரியர் அனைவரும் திருக்களிற்றுப் படியார்ப் பாடல்களை மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார்கள். இது இயல்பே. எனினும் ஒரு செய்தி இங்கு அறியத்தக்கது. 15 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த தத்துவராய சுவாமிகள் என்ற புகழ் பெற்ற வேதாந்த நூல் ஆசிரியர், தாம் தொகுத்த சிவப்பிரகாசப் பெருந்திரட்டு என்ற 2821 பாடல் கொண்ட பெரு நூலில் திருக்களிற்றுப் படியார்ப் பாடல்கள் மூன்றை மட்டும் சேர்த் திருக்கிறார். ஏனைய சித்தாந்த சாத்திரங்களை அவர் தொகுக்கவில்லை. வேதாந்தியான அவர் இந்நூலின் கருத்துக்கள் மட்டும் தம் கொள்கைக்கு முரண் இல்லாதன என்று கருதினார் போலும்! அவர் கொண்ட பாடல்கள் பின் வருவன:

| களிற்றுப்படி | பெருந்திரட்டு |
|---|---|
| 5. ஆகமங்கள்எங்கே | ஆசாரியர் மான்மியம் 22 |
| 6. சாத்திரத்தை ஓதினர்க்கு | சாத்திர சங்கற்பம். 4 |
| 12. பாலை நெய்தல் பாடியதும் கேட்கண்டிரங்கி | இறைவனைப் புகழ்தல். 10 |

மேற்குறிப்பிட்ட பாடல்கள் திருக்களிற்றுப்படியாரைப் புகழ்வது போலவே, உரைகளிலும் சில நயமான புகழ்ச்சிப் பாடல்கள் காணப் படுகின்றன. இந்நூலுக்கு அனுபூதி உரை செய்த கண்ணுடைய வள்ளல், உய்ய வந்தாரைப் புகழ்ந்து அவருடைய சிவானுபவத்தை அழகான ஒரு பாடலில் வடித்துத் தருகிறார். அதைக்கீழே காணலாம்:

பொருளும் மனையும் அற மறந்து பேர்கம்மறந்து புலன்மறந்து
கருவி கரண மவை மறந்து கால ம்றந்து கலை மறந்து
தரும மறந்து தவமறந்து தம்மை மறந்து தற்பரத் தோடு
உருகி உருகி ஒருநீர்மை யாயே விட்டார் உய்ய வந்தார்.

மற்றொரு பாடல் நூலாசிரியரைப் புகழாமல் பொதுவான கருத்தைச் சொல்லுவது.

ஆதார மாகி அருளோடு நிற்கின்ற
சூதான இன்பச் சுகவடிவை- ஓதாமல்
உள்ளவர்கள் கூடி உணர்வொழிய நிற்பதலால்
தெள்ளவா ராதே சிவம்.



# சைவத் திருமுறைகளும் சமுதாய நெறிமுறைகளும்



பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்.

பரம்பரையாகச் சைவ சமயத்தினுடைய வரலாற்றையும், அடியார்கள் பெருமையையும் கேட்டுக்கொண்டே வருகிறோம். ஆனால் ஒரு புதிய முறையிலே சிந்தித்துப் பார்க்க வேண்டும், அந்த அடியார்கள், நாயன்மார்கள் ஆகியோருடைய வரலாறுகள் எந்த வகையிலே மக்களைப் பாதித்தன என்று அறிந்துகொள்ள வேண்டுமென்று யோசனை பண்ணிவேன். பெரிய புராணம் படிக்கிறோம்; தேவாரம் திருவாசகம் படிக்கிறோம். எந்த அளவில் இந்தப் பாடல்கள் அவர்கள் காலத்திலும், அதற்குப் பிற்காலத்திலும் மக்களைத் தொட்டன என்பதை அறிய வேண்டும். நாம் இந்த முயற்சியை எடுத்துக்கொள்ளவேயில்லை. மேலை நாடுகளைப் பொறுத்த மட்டில் அவர்கள் சமயத்தைப் பரப்புகிறார்கள். பரப்பிய பிறகு ..... நீங்கள் நம்ப மாட்டீர்கள் — — புள்ளி விவரம் எடுக்கிறார்கள்.

பைபிளைக் கொடுத்து, அதிலே எவ்வளவு நீ படித்தாய், எந்தப் பகுதி உனக்குப் பிடித்தது, அதனால் இன்றைக்கு உன்னுடைய வாழ்க்கையிலே மாறுதல் ஏற்பட்டதா என்று கேட்கிறார்கள். நம்மைப் பொறுத்த மட்டில் பழங்காலத்திலிருந்தே கீதை படித்தவர்களாதலால், கர்மம் பற்றிக் காற்றிலே சொல்லிக்கொண்டே போய்க் கொண்டிருக்கிறோம், கேட்கிறானா இல்லையா என்பதைப்பற்றிக் கூடக் கவலைப்படாமல், அப்படிப்பட்ட கர்மபலத்தில் ஈடுபடாமல் இருக்கிற உயர்ந்த பண்பாட்டிலே பழகிவிட்ட காரணத்தாலே, சமுதாயத்தைப் பற்றிச் சிந்திக்காமல் இருந்துவிட்டோம். வருகிறவர்களுக்கு இலை போடுகிறோம், நம்மிடத்திலே என்ன இருக்கிறதென்பதுகூட நமக்கே தெரியாது; இன்றைக்குக்கூடக் குடும்பங்களில் பிரமுகர்கள் இருக்கிறார்கள், என்ன இருக்கிறது வீட்டிலே என்று கேட்கிற ஐயாமார்களும், அம்மாமார்களும் இருக்கிறார்கள். ஆகத் தங்கள் வீட்டிலே என்ன இருக்கிறது என்பதுகூடத் தெரியாமல் இருக்கிறார்கள், அப்படி

நாம் இருந்துவிட்டோம்: அப்போது வந்தவர்கள் தங்களுடைய கொள்கை என்ன, கருத்து என்ன என்பதற்குக் குறிப்பீடு வைத்திருந்தார்கள்.

ஆகையால் அவர்களாலே சொல்ல முடிந்தது. கிறித்துவம் என்றால் என்ன? அதற்கு இரண்டு வார்த்தைகளிலிருந்து 20 சொற்பொழிவுகள்வரை பிரசங்கம் பண்ண முடிகிறது, அவர்கள் தயார். சைவம் என்றால் என்ன? ஆமாம், இது யோசனை பண்ண வேண்டியது தான் என்று பரம்பரைச் சைவர்கூடச் சொல்லுகிற அளவுக்கு நாம் இருக்கிறோம். நாயன்மார்கள் 7 - ஆம் நூற்றாண்டிலிருந்து 9 - ஆம் நூற்றாண்டுவரை ஏன் வர வேண்டும்? இப்போது யாராவது வந்திருக்கக் கூடாதா? இல்லை அதற்கு முன்கூட்டியே வந்திருக்கக் கூடாதா? 7லிருந்து 9 - ஆம் நூற்றாண்டு என்ன புண்ணியம் பண்ணியது என்று சிந்திக்க வேண்டும். ஏனென்றால் எனக்கு இப்படி குறுக்கு வழியிலேயே போய்ப் பழக்கம். நான் பிறந்த நேரம் அப்படி.

நான்கும் மூன்றும் ஏழு என்றால் ஏன் எட்டாக இருக்கக்கூடாது என்று சிந்திப்பதுதான் என்னுடைய பிழைப்பு. தவறுகள் பல சமயங்களில் ஏற்படுகிறது. பெரியவர்களெல்லாம் திட்டுகிறார்கள்; அதெல்லாம் இருக்கிறது. ஆனாலும் இந்தப் பக்கம் திட்டுவதற்குப் பதிலாக அந்தப் பக்கம் திட்டுகிறார்கள் என்று நினைத்துக் கொண்டு விடுகிறது. அப்படிச் சிந்திக்கும்போது தமிழ்நாட்டின் வரலாற்றில் இந்த இரண்டு நூற்றாண்டுகளில் நாயன்மார்கள் தோன்றுவதற்கு ஏதாவது அடிப்படை இருக்குமா என்று முதலில் சிந்தித்தேன்; அதாவது, ஏதோ ஒரு சூழ்நிலை உருவாகி, அந்தச் சூழ்நிலையின் பயனாக இவர்கள் தோன்றி இருக்க வேண்டும். அந்தச் சூழ்நிலைக்கும், அவர்களுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். இதை நம்மால் கண்டு பிடிக்க முடியுமா என்று சிந்திக்கத் தொடங்கினேன். அப்புறம், அவர்கள் தோன்றிய பிறகு பாடினார்களே, எதற்காக? தாங்கள் மோட்சம் அடைய வேண்டுமென்பதற்காக அவர்கள் இங்கே வர வேண்டியதில்லையே.

''துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமாறிலாத என்னை மையல் செய்திம் மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய்......''

என்று சொல்கின்ற ஒருவர் இங்கே ஏன் வரவேண்டும்; வேலையே கிடையாதா அவருக்கு. வேலையில்லாமல் அவர் இங்கேவந்தாரா!

பயனில் சொல்லைப் பாராட்டக்கூடாதென்றால் பயனில்லாதகாரி யத்தைச் செய்யலாமா? அப்படியே அவர் செய்யத் தயாராக இருந்தாலும் அவருடைய தலைவன், இறைவன் அவனை ஏன் அனுப்ப வேண்டும். எப்போது அப்படி அனுப்பினானோ, அதனால் ஒரு குறிப் பிட்ட பயன் இருந்திருக்கவேண்டும். அந்தப் பயன் என்ன? சிந்திக்கத் தொடங்கினேன். அப்படியானால் இவர்களுடைய பாடல்கள் இந்தச் சமுதாயத்தைத் தாக்கம் செய்கின்றன. நான் மேசையை அடித்தால், மேசையும் என்னை அடிக்கிறது. இதை மறந்துவிடக்கூடாது. படகில் உட்கார்ந்து கொண்டு, எதிர்ப் படகைத் தள்ளினால் நம் படகு பின்னால் போகும். இதுதான் ஆக்ஷன் அண்ட் ரீஆக்ஷன் என்று சொல்லுவார்கள். தாக்கமும், எதிர்த் தாக்கமும் இல்லாமல் இந்த உலகத்திலே எதுவும் நடப்பதில்லை. இது Physiology function மட்டு மல்ல. Phychological function also;

நாம் பலவிஷயங்களை மறந்து விடுவோம். என் மாதிரி ஆளுக்கு மறதியே பிழைப்பு. மறந்து போச்சு என்று சொன்னால், என் வீட்டுக் காரி சொல்வாள் கொஞ்சம் சாமி கும்பிட உட்காருங்க என்று. சாமி கும்பிட உட்கார்ந்தால் மறந்ததெல்லாம் கப், கப, கபவென்று ஞாபகத்திற்கு வரும். அது எனக்குப் பழக்கம். எனக்கு முன்பே ஒருவர் சொன்னார். கண்ணை மூடித் தியானம் என்று உட்கார்ந்தால் கிடு, கிடுவென்று விட்டது தொட்டதெல்லாம் வரும். அப்போது ஏதோ ஒரு அடிப்படையிலே தாக்கமென்று சொன்னால், கான்சன் டிரேட் பண்ணனும் என்று நினைத்தால், நான் - கான்சன்டிரேஷனுக் குரிய போர்ஷன்ஸ்- எல்லாம் வேலை செய்ய ஆரம்பிக்கும். இது Phychological, Phsyiological and Phycical. இந்த மூன்றிலேயும் இது உண்டு.

தாக்கத்திற்கு எதிர்த்தாக்கம்: வேலையற்றுப்போய் இத்தனை நாயன்மார்கள், ஏறத்தாழ அவர்களுடைய காலத்தில்தான் ஆழ்வார்கள் வந்து பாடிவிட்டுப் போகவில்லை. நாம் ஜாலரா போட்டுக் கொண்டு தெரு சுற்றிவரப் பாடியிருப்பார்களா; இல்லை அவர்கள் மோட்சம் போவதற்குப் பாடியிருப்பார்களா; இல்லை இரண்டுக்குமா? இதையெல்லாம் யோசனை பண்ண வேண்டும். நான் யோசனை பண்ணினேன். அந்த யோசனையினுடைய பலன் தவறோ, சரியோ அது வேறு. அப்போது அவர்கள் தோற்றத்தால், அவர்கள் பாடல் களால் சமுதாயம் பெற்ற பலன் என்ன என்பதைச் சிந்தித்தேன்; சைவம் எப்படிச் சமுதாயத்தைப் பாதித்தது; சமுதாயம் சைவத்தை எப்படிப் பாதித்தது?. (வளரும்)

## ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை | ரூ. 1–50 |
| நீதிநெறிவிளக்கம் | ,, | விலை | ரூ. 1–50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை | ரூ. 0-75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை | ரூ. 1-50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை | ரூ. 1-00 |
| திருவுந்தியார் | ,, | விலை | ரூ. 1-25 |
| கொடிக்கவியும் வினுவெண்பாவும் | ,, | விலை | ரூ. 0-75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை | ரூ. 1-50 |
| இருபா இருபஃது | ,, | விலை | ரூ. 1-25 |
| போற்றிப் பஃறொடை | ,, | விலை | ரூ. 1-25 |
| நெஞ்சுவிடு தூது | ,, | விலை | ரூ. 1-50 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை | ரூ. 3-00 |
| மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்-கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை | ரூ. 3-00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | | விலை | ரூ. 15-00 |
| திருவருட்பயன்-நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன் | | | ரூ. 5-00 |
| அபிராமி அந்தாதி தெளிவுரையுடன் | | விலை | ரூ. 1-00 |
| திருவிளையாடற்புராணம் | (உரைநடை மதுரைககாண்டம்) | விலை | ரூ. 4-00 |
| திருவிளையாடற்புராணம் | (உரைநடை கூடற்காண்டம்) | விலை | ரூ. 3-50 |
| திருமுறைகண்ட புராணம் | சேக்கிழார் புராணம் | விலை | ரூ. 0-75 |
| திருத்தொண்டர் புராணம் | (மூலம்) | விலை | ரூ. 12-00 |
| திருத்தொண்டர்புராணம் | (உரைநடை) | விலை | ரூ. 12-00 |
| Peeps in to the Cultural Heritage of Hinduism (M. ARUNACHALAM.) | | விலை | ரூ, 25-00 |
| கந்தபுராணம் மூலம் 2ம் பகுதி (புழையுபதிப்பு) | | விலை | ரூ. 4-00 |
| திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் (திருமுறைக் கலைஞர் க. வெள்ளைவாரணனர்) | | விலை | ரூ 3-25 |

*விற்பனையாளர்களுக்கு 20% கழிவு உண்டு.*

*ரூ: 1000/க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புஞ்செலவு இலவசம்.*

*முகவரி;-* மேலாளர்:
*ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் 612504*
*(தஞ்சை மாவட்டம்)*

# அதிரவீசி ஆடுவார்

கா. ம. வேங்கடராமையா, M. A. B. O. L.,

மதுரையில் இறைவன் பாண்டிய மன்னனின் வேண்டுகோட்கிணங்கிக் கால் மாறியாடியமையைத் திருவிளையாடற் புராணங்கள் விரிவாகக் கூறுகின்றன. கால் மாறியாடினமை பற்றித் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் ஆகிய இரு நூல்களும் கூறும் செய்திகளையும், மக்கள் அத்திருவிளையாடலில் தோய்ந்திருந்தமைக்குரிய கல்வெட்டுச் சான்றுகளையும் காண்போம்.

மாறியாடின திருவிளையாடல்:

பாண்டிய அரசன் ஒருவன் மதுரைப் பெருமான்மேல் மாறா அன்புடன் பகையின்றி அரசாண்டான்; இப்பாண்டியன், சிவபெருமான் உலகம் உய்யத் திருக்கூத்து ஆடுதலின் அதனைக் கற்றலாகாது என்னும் எண்ணத்துடன் பரதக்கலை தவிர மற்ற எல்லாக்கலைகளையும் கற்றான். 'எண்ணெண் கலைவல்லான்' என உலகம் புகழ வாழ்ந்து வந்தான்;

பாண்டியனின் மிகு புகழைச் சோழன் அறிந்தான்; சிறிது பகையுணர்வு கொண்டான்; ஆடற் கலையையும் நன்கு கற்றான். அறுபத்து நாற்கலைகளிலும் தேறி 'எண்ணெண் கலைவல்லான்' என்னும் புகழடைந்தான்.

பாணன் ஒருவன் சோழனைக் கண்டு பரிசில் பெற்றான்; பின் மதுரைக்குச் சென்றான்; பாண்டியனை வணங்கி, ''எண்ணெண் கலைவல்லான்'' என்னும் பெயர் நினக்குரியதன்று; அப்பெயர் சோழனுக்குரியது; நீ கூத்துக் கற்கவில்லை அல்லவா?'' எனத் துணிவுடன் மொழிந்தான். பரிசில் பெற்றுச் சென்றான்.

பின்பு பாண்டியன் கூத்தினையும் கற்க விரும்பினான். 'புயங்க நட்டம்' என்னும் இறையவன் ஆடும் ஒருவகை நடனம் பயில நாட்டம் உற்றான்; அமைச்சர்கள் உதவியால் ஆவன புரிந்தான்: இடத்தாளை மேலே தூக்கி வலப் பாதத்தை ஊன்றி ஆடும் கூத்தினைச் சில நாட்களில் மிக

வருத்தம் உற்று முழுமையாகக் கற்ருன்; இறைவன் ஆடும் திருக் கூத்தினைத் தான் கற்க நேரிட் டமைக்காக உள்ளம் வருந்திஞன்.

கூத்தின் வல்லவனுகிய பாண் டியன் ஒரு தாளை ஊன்றி மற் ருெரு தாளை வளைத்து மேலே எடுத்து நிற்கும் போது உடல் நோவது கண்டான்; 'எனக்கு ஒரு கணம் இவ்வாறு நிற்கவும் இய லாததாக இருந்தது; இறைவன் மாறிநின்று ஆடாமல் மன்றத் துள் திருநடம் புரிகின்ருரே' என வருந்திஞன்; ஆழ்துயர் உற்ருன்; ''இறைவன் முது பேரண்டம் சராசரம் அனைத்தும் தாங்கும் பெரியவன் எனவே இறைவனுக்கு வருத்தம் இல்லா மலும் இருக்கலாம்' எனத் தெளி வான்; தேராஞகி மீண்டும் துன் புறுவான்.

மதுரைச்சொக்கர் பாண்டிய னுடைய மனக்கவலையைப் போக்க மனமிரங்கினர்; வெள்ளி யம்பலத்தில் பதஞ்சலியும் வியாக் கிரபாதரும் காண ஆடும் திருக் கூத்தினை விடுத்துப் புதுமைக் கூத்தாடினர்; வலப்பதம் இடம் வரவும் உடுக்கையுடைய இடக் கரம் வலம் வரவும் திருவடியின் மேற்கொடியைக் காட்டி மெல்ல ஆடுதலை விடுத்து அதிர வீசி, மாறனும் துயர் கெட நள்ளிரவில் கான் மாறியாடினர்.

விடியலில் தொண்டர்கள் மூலம் பாண்டியன் இதனை அறிந் தான்; கோவில் புக்கு வழிபட் டான்; மாறியாடிய கூத்தே நிலைத்திருக்க வேண்டினன்; இறைவனும் அருள்புரிந்தார்.

மனம்மிக மகிழ்ந்த பாண்டியன் சிற்றம்பலம் பொன் வேய்ந்தான்; முத்துக்கயிறு கட்டினன்; மாணிக் கத்தாலாகிய விளிம்பு செய்தான்; பல மணிகளால் ஒழுங்குறக் கோயிலை அலங்கரித்தான்; முத்துக் கவிகை, மாணிக்கக் காம் புடைய கவரி, வயிரம் சேர்ந்த கனக சிங்காதனம், நீண்ட முடி, பூண், புதிய வாசிகை முதலியன தந்தான்.

மாறியாடிய நாள் முதல் சொக் கருக்கு அதிரவீசி ஆடுவார் என்றும் மாறியாடிக் கொடியிட்ட பெருமான் என்றும் பலரறியப் பெயர்கள் வழங்கலாயின. இச் செய்தி அறிந்த சோழன் பகை விட்டுச் சிவனினும் செழியர் கோவை வழுத்தினன். இங்ஙனம் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறு கிறது.

பரஞ்சோதி முனிவர் விளையாடலில்:

மதுரைச் சொக்கர் கான்மாறி யாடிய காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னன், விக்கிரம பாண்டியன் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்க ஏற்று ஆண்ட இராச சேகரன் எனவும், சமகாலச்சோழ அரசன் ஆனைக்காவுறை அண்ணல்மீது ஆராக் காத லுடைய கரிகாற் பெருவளத்தான்

எனவும் பெயர் கிளந்து ஓதப் பட்டுள்ளது:

சோழநாட்டுப்புலவன் நீ கூத்துக் கற்றிலே என்றதால் பகையும் மானமும் மீதூரப் பாண்டியன் பரதநூல் கற்றான். இறைவன் திருநடம் ஆடுதலில் உள்ள துன்பம் அறிந்தான்; கால் மாறியாடச் செய்ய விரும்பினான்; சிவராத்திரி அன்று கோவிலுக்குச் சென்றான்; சிவாகம விதிகளின்படி நான்கு யாமப் பூசைகள் செய்த பின்னர் இறைவனுடைய திருக் கூத்துக் கண்டான்; கையிரண் டையும் தலைமேற் கூப்பிக், 'கால் மாறியாடி என் வருத்தம் போக்க வேண்டும்; இன்றேல் நான் என் வாளின் மேல் குப்புற வீழ்ந்து இறப்பேன்' என்று கூறிப் பணிந் தான். வாளின்மேல் மாறன் பாயு முன் பாண்டியன் காண, இடத்தாள் ஊன்றி வலத்தாள் வீசிக் கால்மாறியாடி யதாகப் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணம் கூறு கிறது. இப்புராணப் பகுதி பரத நூற்பகுதிகளை விளக்குகிறது.

(செய்யுளெண்8-14)

இறைவன் உற்ற இரு திருப்பெயர்கள்:

இறைவன் கால்மாறி ஆடியமை யினால் பலரறிய இரண்டு திரு நாமங்களைப் பெற்றதாகப் பெரும் பற்றப் புலியூர் நம்பி திருவிளையாடல் கூறுகிறது:

'இறைவன் புதுமைக் கூத் தாடுங்கால் மெல்ல ஆடுதலை விடுத்து அதிரவீசி ஆடினான்' என நம்பி திருவிளையாடல் கூறுகிறது: 'அதிரவீசித் திதமுறு மதுரை" (கட: 16) புதுமைக் கூத்தை ஆடினான் அதிரவீசி (32:12) என்ற பாடற் பகுதிகளால் இறைவன் மாறியாடுங்கால் அதிர வீசியா டினமை புலப்படும்.

சமய குரவருள் முதல்வராகிய திருஞானசம்பந்த சுவாமிகள் 'வீடலால வாயிலாய்' எனத் தொடங்கும் பதிகத்தில்,

'முதிரும் நீர்ச் சடைமுடி
முதல்வன்நீ முழங்கழல்
அதிரவீசி யாடுவாய்
அழகன் நீ புயங்கன் நீ
மதுரன் நீ மணாளன் நீ
மதுரை யால வாயிலாய்
சதுரன் நீ சதுர்முகன்
கபாலம் ஏந்து சம்புவே'

என்ற நான்காம் திருப்பாடலில் ஆலவாய் அழகர் அதிரவீசி ஆடி யமையைக் குறிப்பர். இறைவன் அதிரவீசியாடியமையால் அதிர வீசியாடுவார் என்னும் பெயர் வழங்கிற்று என்பது திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும் செய்தி.

ஆலவாய் அண்ணல் பதஞ்சலி முனிவருக்காக முன்னர் ஆடினார். பாண்டியனுக்காகக் கால் மாறி

யாடுங்கால் திருவடியின் மேற் கொடி காட்டினார். இதனை,

'ஏர்தரும் வலப்பதம்
இடம்வரப் பணி
சார்தரும் இடக்கரம்
வலம்வ ரத்தனி
வாதுறு கூத்தினை
யாடி மாசறு
கோவைசூழ் தாள்மிசைக்
கொடியும் காட்டினார்'

என்ற நம்பி திருவிளையாடல் பாடலால் அறியலாம். இக்கார ணத்தால் மாறியாடிக் கொடியிட்ட பெருமான் என்ற பெயர் வந்ததெனத் திருவாலவாயுடை யார் திருவிளையாடற் புராணம் கூறும். இவ்விரு பெயரும் வந்தமையை,

'அன்றுமுன் அதிர வீசி
யாடுவான் என்றுமேவார்
குன்றுமுன் மாறியாடிக்
கொடியிட்ட பெருமான்என்றும்
மன்றுற வழங்கக்கேட்ட
வளவனும் இகல்விட்டன்பிற்
சென்றுமுன் வழுத்தினான்அச்
சிவனினும் செழியர்கோவை.'

என்ற திருவாலவாயுடையார் திருவிளையாடற் செய்யுள் காட்டும்.

அழகன் அதிரவீசியாடுவார்

நம்பி திருவிளையாடலிற் கூறப் பட்ட, இறைவன் அதிரவீசி யாடுவார் என்ற பெயர்பெற்ற செய்தி மக்களிடையே பரவி இருந்தது. அதிரவீசி யாடுவார் என்ற பெயரும் திருவாலவாயு டையார் திருவிளையாடலும் மக்களால் நன்கறியப் பட்ட மையை வெள்ளனூர் அகத்தீசு வரர் கோயிலில் உள்ள மாற வர்மன் குலசேகர பாண்டியனின் 20ஆவது ஆட்சியாண்டுக் கல் வெட்டால் உறுதி செய்ய முடியும். ''சொக்கக்கூத்தர்க்கும் ஆவுடைநாச்சிக்கும் அமுது படிக்காக மேல்வேம்பநாட்டு மயேந்திரபுரத்து அழகன் அதிரவீசி யாடுவார் என்பவன், தென்சிறு வாயில்நாட்டு வெள்ளைநல்லூ ருடையான்' எடுத்தான், சேடன் முதலியவரிடம் வாங்கிய ஊர் வயலில் இராமதேவி உடலான தம்பிக்கு நல்லானில் வடக் கடைய மூன்றில் ஒன்று நீக்கித் தருமமாகத் தந்தான்'' எனக் கல் வெட்டுக் குறிக்கிறது (புதுக் கோட்டைக் கல்வெட்டுக்கள், எண். 540.) இறைவன் ஆடிய தாண்டவம் சொக்கத் தாண்டவம் என்பர் நம்பி, இந்தக் கல்வெட்டு இறைவனைச் சொக்கக் கூத்தர் எனக் கூறுவதும் திருவிளையாடற் புராணச் செல் வாக்கைக் காட்டும் சான்றே யாகும்.

அதிரவீசி யாடுவான் திருநந்தனம்:

சிதம்பரம் திருக்கோவிலில் உள்ள கோப்பெருஞ்சிங்கனின் ஒன்பதாவது ஆண்டுக்குரிய தொரு கலவெட்டு (S. I.I. Vol

XII INS No -157; 318 of 1913) அதிரவீசி யாடுவான் பெயரால் ஒரு திருநந்தவனம் அமைந்திருந் ததனைப் புலப்படுத்துகிறது. இத் திருநந்தவனம் மடந்தையர் மாணிக்க நல்லூரில் இருந்தமை யினை 'மடந்தையர் மாணிக்கநல் லூரில் அதிரவீசி ஆடுவான் திரு நந்தவனக்குடி' என்ற கல் வெட்டுப் பகுதியால் அறியலாம்;

அதிரவீசிஆடுவான்—நிலப்பெயர்

மாரமங்கலம்கோயிலில் உள்ள வீரபாண்டிய தேவருக்குரிய 11ஆவது ஆட்சியாண்டுக் கல் வெட்டில்,

''திருநுந்தா விளக்குப்புறம் புனிதன் சொலே கொண்டிட்ட நிலம் முக்காணியும் அதிரவீசி யாடுவானுக்குக் கிழக்கு'' என்ற பகுதியால் (S. I. I. Vol VIII INS. No. 452: 159-60 of 1903) ஒரு நிலம் அதிரவீசி யாடுவான் எனப்பெற்றது என்று அறியலாம்.

நக்கன் அதிரவீசி யாடுவார்

காளையார் கோவிலில் உள்ள திரிபுவனச் சக்கரவர்த்தி வீர பாண்டியனின் 24வது ஆண்டுக் குரிய கல்வெட்டு (S. I. I. Vol VIII INS No 181; 586 of 1902) நக்கன் அதிரவீசியாடுவார் என்று ஒருவனைப் பற்றிக் குறிப்பிடு கிறது:

மாறியாடும் பெருமாள்

இறைவன்மாறியாடிய திருவிளை யாடலை அறிந்தின்புற்று ஈடு பாடு கொண்ட சிவநெறிச் சீலர் கள் மாறியாடும் பெருமாள் என்ற பெயர் சூடிக்கொண்டனர்: திரு மையம் கைலாச நாதர் கோயி லில் உள்ள முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் பன்னிரண் டாவது ஆட்சியாண்டுக்குரிய (கி. பி. 1263) கல்வெட்டுள் கையொப்பமிட்டவருள் ஒருவன் பெயர், 'மாறியாடும் பெருமாள் முத்தவனப் பெருமாள்' என்று காணப்படுகிறது: (புதுக் கோட்டைக் கல்வெட்டுக்கள் எண். 351.)

தொகுப்புரை

இரண்டு திருவிளையாடல்களும் மிகச் சுவையாக இத்திருவிளை யாடலைக் கூறுகின்றன; மாறியா டியமையை ஒட்டி 'அதிரவீசி யாடுவார்', 'மாறியாடிக் கொடி யிட்ட பெருமாள்' என்ற பெயர்கள் இறைவனுக்குப் பயில வழங்கின என்பர் நம்பி. அதிர வீசியாடுவார், மாறியாடும் பெருமாள் என்னும் பெயர்களை மக்களுக்கும் பிறவற்றுக்கும் இடப்பெற்ற செய்தியைக் கல் வெட்டுக்கள் காட்டுகின்றன. திருவிளையாடற்புராணக் கதை களைக் கேட்டும், படித்தும், சிந்தித் தும், பெயர் சூட்டியும் மக்கள் பலவாற்றானும் திருவிளையாடற் புராணத்தைப் பயின்று வந்த மையை இத்தகைய சான்றுகள் காட்டும்:

# கொள்ளை லாபம்

பனசை சுவாமிநாதன்.

தமிழகம் தன்னிகரற்ற பழஞ் சிறப்பினையுடையது; வளங்கள் மலிந்த பொன்னாடு; அதன் பெருமைகளும் பெற்றிமையும் அளவிலடங்காதது: தன்னிடம் உள்ளதைப் பிறர்க்குக் கொடுத்து, பிறரிடமிருந்து தனக்கு வேண்டியதைப் பெற்று வாணிபத்தில் தலைசிறந்து விளங்கியது. அதியமான் போல, 'உண்டாயின் பதங் கொடுத்து இல்லாயின் உடனுண்ணும்' ஒருமையுடையது. பண்டைக் காலந்தொட்டே பிற நாடுகளுடன் இறக்குமதி, ஏற்றுமதி செய்வதில் சிறந்து விளங்கியது. இதற்கான வரலாற்று ஆதாரங்கள் ஏராளம்.

வணிகத்துறையில் மேன்மை பெற்றிருந்ததோடு, அத்தொழிலின் மேன்மையையும் அது போற்றி வந்திருக்கிறது. வாணிகம் செய்வாரின் இலக்கணத்தை அழகாக வரையறுக்கிறது குறள்.

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்.

''பிறவும் தமபோல் செய்தலாவது கொள்வது மிகையும், கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநாடிச் செய்தல்'' என அழகாக உரை வகுப்பர் பரிமேலழகர்.

இதனையே பட்டினப் பாலையும் 'பொய் கூறாமல், தாம் கொள்ளும் சரக்கையும் தாம் கொடுக்கும் பொருட்கு மிகையாகக் கொள்ளாது, தாம் கொடுக்கும் சரக்கையும் தாம் வாங்கும் பொருட்குக் குறையாகக் கொடாமல் ஒழுகுவது' எனும் கருத்தமைய,

வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது

என்றுரைக்கும்.

இந்நாளைய வணிகர், இலாபம் ஒன்றையே கருதி, அதனை மறைத்து நஷ்டத்துக்கு விற்பனை செய்வது போலப் பாவனை செய்வதைக் காண்கிறோம். ஆனால்,

அக்கால வணிகரோ இலா பத்தைச் சொல்லி,

''பல்பண்டம் பகர்ந்து வீசும்'' (பட்டினப்) இயல்பினர்.

இலாபம் ஒன்றனையே முழுமுதலாகக் கருதாமல் பொது ஜன சேவை செய்வோர் சிலர். இலாபமே குறிக்கோளாகக் கொள்ளை லாபம் பெற, குறுக்கு வழியில் முயல்வோர் பலர்.

மதுரையின் நாயகர் சோம சுந்தரக் கடவுள் வளையல் விற்ற திருவிளையாடல் பற்றிக் குறிப்பிடுகின்ற ஸ்ரீ குமரகுருபரர் அவரைக் கொள்ளை லாபக்காரராக, பழிப்பது போலப் புகழ்கின்றார். அப்பாடல் அகத்துறையமைந்தது.

அவர் விற்க வந்தது வளையல்களை; ஆனால் அவர் அழகைக் கண்டு மதுரை நகர மகளிர் அவரிடம் அன்பு கொண்டனர்; அதனால் கைவளைகள் சோர்ந்தன. அதனால் விற்க வந்தவரே அவற்றைக் கொண்டு செல்லுதல் நியாயமல்ல என்கிறார் கவிஞர்.

வியாபாரம் செய்பவர்கள் கொண்டுவந்த பொருள்களை விற்பார்கள். விற்பனையாகவில்லையெனில் தாம் கொண்டு வந்த பொருள்களையே எடுத்துச் செல்வர். ஆனால் இவ் வாணிகரோ வளையல்களைக் கொண்டு வந்தார். அவற்றை விற்கவில்லை; அதோடு மதுரை நகர மகளிர் கையில் அணிந்திருந்த வளையல்களையும் பறித்துச் சென்றார்; எனவே அவருக்குக் 'கொள்ளை லாபம்' ஏற்பட்டது என்கிறார் தெய்வக் கவிஞர்.

இவ்வாறு திருவிளையாடல் புரிந்ததால், அவர் மதுரை நகர வீதியில் வந்தது வளையல் விற்பதற்கா? அல்லது வளையல்களைக் கொள்முதல் செய்வதற்கா? என்றும் வியந்து வினவுவார்.

வளையல்களைக் கையில் கொண்டு விற்பவர் போல வந்தீர்; மகளிர் கையிலுள்ள வளையல்களைக் கொள்ளை கொண்டீர்; எனவே உமது வியாபாரத்தில் கொள்ளை இலாபம் அடைந்து விட்டீர்; இம் மகளிர்க்கு வளையல்களை விற்பதற்காக வந்தீரா? அல்லது அவர்கள்தம் வளையல்களைக் கவர்வதற்காக வந்தீரா? என்று கேட்பது போல இப்பாடலை அமைக்கின்றார் ஸ்ரீ குமரகுருபரர்.

மதுரைக்கலம்பகத்தின் எட்டாம் பாடலாக அமைந்துள்ளது இப்பாடல்.

வலங்கொண்ட மழுவுடையீர்
வளைகொண்டு விற்பீர்போல்
மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார்
கைவளையெல்லாங் கொள்ளை
கொள்கின் றீராற்
பலங்கொண்ட செட்டுமக்குப்
பலித்ததுநன் றுனீரிப்
பாவை மார்க்குப்
பொலங்கொண்ட வரிவளைகள்
விற்பதற்கோ கொள்வதற்கோ
புறப்பட் டீரே.

## ஆலய பூஜை படிக்காசு நிதி

## நன்கொடையளித்த அன்பர்கள் விவரம்

| | | |
|---|---|---|
| | 1—1—83 வரை கூடுதல் | 14793-10 |
| 1. | திரு. A. இராகவானந்தம் சென்னை | 101-00 |
| 2. | திருமதி. C. இராணி கும்பகோணம் | 30-00 |
| 3. | திரு. தா. ம. வெள்ளைவாரணம், பனசை | 10-00 |
| 4. | திரு. அப்பு துர்க்காகுடில் கும்பகோணம் | 5-00 |
| 5. | திரு. M. சுப்பிரமணிய முதலியார் பனசை | 3-00 |
| | 1—3—83 வரை கூடுதல் | 14,942-10 |

# சமயம் இல்லையேல் எதுவுமே இல்லை



ந. ரா. முருகவேள், M. A., M. O. L.,

சமயம் என்பது, நம்முடைய மனித குல வாழ்க்கையில், நாம் எளிதாக இகழ்ந்து புறக்கணித்து விடக்கூடிய, ஏதோ ஒரு சிறு பகுதியோ அல்லது ஓர் அற்பமான கூறோ அன்று. சமய உணர்வின் ஆற்றல் மனித வாழ்க்கையின் தொடக்கம் முதல் இறுதிவரையில் முழுவதுமே ஊடுருவிப் பரவி விரவிப் பிரிவறக் கலந்து இயைந்து நிற்கின்றது. சமய உணர்வை மறுப்பவர்களின் வாழ்க்கையிலும்கூட, அஃது எவ்வகையாலேனும் தவிர்க்க முடியாதபடி முனைப்புற்று அமைந்து நின்றே, செயற்பட்டு வருகின்றது. ஆத்திகம் என்பது சமய உணர்வின் உடன்பாட்டுமுறை நிகழ்ச்சி என்றால், நாத்திகம் என்பதும் அதன் எதிர்மறைமுறைச் செயற்பாடேயாகும். நாத்திகர்கள் என்போர் கடவுளை மறுக்கவில்லை; கடவுளைப் பற்றிய பொருத்தமற்ற, இழிவான கருத்துக்களையே மறுக்கின்றனர். (Atheists do not deny God; they deny only the quixotic and grotesque ideas about God) எத்துணை மருத்துவம் செய்தும் அறவே தீர்ந்து நீக்கமுடியாத நிலையின் அளவுக்கு, மனிதர்கள் சமய உணர்வில் தம்மையும் அறியாமல் அழுந்தித் தோய்ந்தே கிடக்கின்றனர் (Man is incurably religious). எவ்வகையாலேனும் சமய உணர்வு கலக்கப்பெறாத, மனித வாழ்வு என்பது அமைதல், அறவே அரிது.

''எவர் ஒருவரும், உதாரணமாக, கலைப் பொருள்கள் பற்றியோ அல்லது கட்டிடக் கலையின் வடிவங்கள் பற்றியோ, சமய உணர்வினால் வழங்கப்படுகின்ற உள்ளுணர்வுத் தூண்டுதற் குறிப்பு எதுவும் இல்லாமல், ஒரு சிறிதும் ஆராய்ந்துணர்தல் இயலாது;

அவ்வாறே இசையைப் பற்றியும், கவிதையைப் பற்றியும், சமய உள்ளுணர்வினல் நிகழ்ந்த விளைவின் தொடர்பு இல்லாமலோ, அல்லது எவ்வாற்ருலேனும் சமய உணர்வின் குறிப்பு எதுவும் இல்லாமலோ, கற்றுணர்ந்து தெளிதல் இயலாது. வரலாற்றியல், சமூகஇயல், மனிதஇயல் போன்றவைகளும்கூட, சமயச் சார்பான பழக்க வழக்கங்களும் மரபுநெறிகளும் பற்றி ஆராயாமல், நன்கு கற்பிக்கப்படவோ, அல்லது திருத்தமான முறையில் பிழையின்றி விளக்கப்படவோ, இயலாது. எத்தனையோ பல மனிதர்களின் வாழ்க்கையினையும் நடத்தையினையும், ஒரு பெரும் ஆற்றலாக இருந்து சமயமானது இயக்குகின்றது ஒழுங்குபடுத்துகின்றது-மாற்றங்கள் விளைவிக்கின்றது- நெறிப்படுத்திச் செல்லுகின்றது என்னும் உண்மையைக் குறிப்பிடாமல், மன இயலைப் பற்றி ஆராய்ந்து விளங்கிக் கொள்ளவோ, விளக்கிச் சொல்லவோ, பெரும்பாலும் முடியாது. இந்த ஒரு சில கலைத்துறைகளுக்குப் பொருந்துகின்ற இந்த உண்மையானது, ஏதேனும் ஒரு பெரும் அளவிலோ அல்லது ஒரு சிறிய அளவிலோ, அரசியல் – பொருளியல் – தத்துவம் - மருத்துவம் முதலிய பலவேறு பிற கலைகளுக்கும்கூடப் பொருந்துகின்ற உண்மையேயாகும்'';* ஆதலின், சமயம் என்பது மனித குல வாழ்க்கையின் அடிப்படையான பெரும் தேவையும், மிகவும் இன்றியமையாத அரும் பெரும் சாதனமும் ஆகும்.

---

*''No one, for instance can study themes of art or forms of architecture without some reference to the impetus provided by religion. Similarly, one cannot learn about music and poetry without somehow mentioning the influence of religious inspiration. Neither History, nor Sociology nor Anthropology can be taught or interpreted without consideration of religious customs and practices. To discuss psychology without reference to religion as a force which motivates, regulates, influences and even directs the behaviour of many individuals is almost impossible. What is true of these few disciplines is also true to a greater or a lesser degree of Politics, Economics, Philosophy, Medicine and so on'':

—*Dr. S. A. Nigosian*
in his preface to ''World Religions''



# "அரத்துறை அடிகள்தம் அருள்"

சபா. பரமசிவம், திருவிடைமருதூர்.

மறையனைத்தும் ஒரு வடிவா மென நிறை மதிப்பிள்ளை நீள் நிலம் சேர்ந்ததென சிவம் பெருக் கும் பிள்ளையார் காழியின்கண் தோன்றி சிவனடியே சிந்தித்துத் தவமுதல்வர் சம்பந்தரானார். தலங்கள்தோறும் செல்ல முற் பட்டுக் கோலக்கா சென்றார். பொற்றாளம் பெற்றார். திருத் தாளத்துடன் காழிநோக்கி நடந்து செல்லும்போது தங்கள் குலத்தாதையார் தரியாது தோ ளின் மீது தரித்துக்கொள்கிறார். சண்பை வந்துற்றார். திருநீல கண் டத்துப் பெரும் பாணர் அங்கு வந்து பிள்ளையார் கழல் வணங்கி இசைத் தொண்டராகின்றார். இசைத்தொண்டருடனும், ஏனைய அடியார்களுடனும் திருஞான சம்பந்தர் தில்லைக்குச் செல்கின் றார். தென்திசைத் திருவாயில் வழியே உள் புகுந்து, ஆனந்தக் கூத்தன் அடிமலர் பணிந்து கண் ணார அமுதுண்டு காலம் பெற அழுகின்றார். காழிக்குளக்கரையில் திருத் தோணிச் சிகரம் பார்த்து அழுதமையுடன் இதன் அருமைப் பாட்டையும் நினைவோமாக.

'அவர்தொழுதேத்தும் சிற்றம் பலம்' எனக் கூறி கூத்தப்பிரானி டம் பிரியா விடைபெற்று நிவாக் கரை, எருக்கத்தம் புலியூர், முது குன்றம், பெண்ணாகடம், தூங் கானை மாடம் ஆகிய தலங்கள் தோறும் பதிகங்கள் பாடிப் பரவச முற்றுத் திருவரத்துறை வர நினைக்கின்றார்.

'ஞாலம் உய்ந்திட ஞானம் உண்டவர்' பெண்ணாகடம் வரை தந்தையார் தோள்மீது வருகின் றார். தலங்கள் தோறும் செல்லுங் காலத்து, ஒரோவொருகால் தந்தையார் பியல் மேலிருப்ப தன்றி நாள் முழுமையும் தந்தை யைச் சுமக்கச் செய்வதில்லை. வீதி வலம் வரும் போது தோள்மீது இருத்தல் இல்லை. தவிர்த்து விடு கின்றார்.

வைதிக மாமணியாம் சம்பந்தர் மாறன்பாடி வருகின்றார். வழி நடந்த களைப்புடன், வெயில் நிலைமையறிந்து, அடியார்கள் வெய்துறுவதை விரும்பாதவ ராய் ஏறும் அஞ்செழுத்தை ஓதி

இரவு முழுதும் மாறன் பாடியில் தங்குகின்றார்: அவ்விடத்தில் அஞ்செழுத்து ஏறும் என்ற அடைமொழி அமைந்துள்ளது. ஏற்றமுடைய அஞ்செழுத்து என்பதுடன், அரத்துறை அடிகள் அருளால் பின்னர் சிவிகையில் ஏறவிருக்கும் நிலைமையைச் சேக்கிழார் அழகுறச் சித்தரிக்கும் காட்சி சிந்தனைக்கு விருந்தாக வுள்ளது:

''வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்''-என்று கண்ணகியின் காலடிமெல்மைத்தன்மையறிந்து வருந்தினார் இளங்கோவடிகள் இங்கேயோ 'பாசம் ஒன்றிலராயினும் பார்மிசைஆசை சங்கரற்கு ஆயின தன்மையால் தேசமிக்க திருவுருவான' சம்பந்தரின் ஆறு. செல் வருத்தத்தினைப் போக்க அரத்துறை அடிகள் அருள் செய்வதில் வியப்பொன்று மில்லையே!

நெல்வாயில் பதியில் மாடமாமனைகளில் தங்கியுள்ள மறையோர்க்கு அரத்துறை இறைவன் இரவில் கனவில் சென்று தன் சேவடி தோன்றக் காட்டிப்பின், ''ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான், மான முத்தின் சிவிகை மணிக்குடையான சின்னம் நம்பாற்கொண்டுஅருங்கலைக் கோனை அவன்பால் அணைந்து கொடும்'' என்று கூறுகின்றார். இது கேட்ட அவ்வூர் மறையவர் பொழுது விடியும்வரைப்பொறுத் திராமல் அனைவரும் ஒன்றுகூடித் தமக்குப் பெருமான் உரைத்த உரையுணர்ந்து அரத்துறை இந்து சேகரர் கோவில் வந்தெய்தினர். மறையோர்க்கு ஏற்பட்ட உணர்வு போல் மற்ற அருள் அடியார்களுக்கும் ஏற்பட்டது. இரவில் கோவில் காப்பாளராக உள்ளே தங்கி இருப்பார்க்கும் ஏற்பட 'ஈங்கிதென்ன அதிசயமென' அனைவரும் ஆர்ப்பொலி எழுப்பினர், திருப்பள்ளி எழுச்சியின் காலம்எய்திட சீலம் மிக்கார் திருக்காப்புநீக்கினர். ''இங்கள் நீர்மைச் செழுந் திரள்முத்தினால் துங்க வெண்குடை தூயசிவிகையும், பொங்க ஊதும் பொருவருஞ் சின்னமும் அங்கண் நாதர் அருளினால் கண்டனர்.

ஏறுதற்கு முத்துச் சிவிகை, பிடிப்பதற்கு முத்துக்குடை, ஊதுவதற்குப் பொற் சின்னங்கள் கண்ட அனைவரும் கைகளைத் தலைமேற்குவித்து வணங்கினர். சின்னங்களுக்கே உச்சி மேற்கை குவிக்கும் சிறப்புப் போற்றத்தக்கதல்லவா! இராணுவத்தின் உயர் அலுவலர் அமர்ந்து வரும் காரில் அவரின்றிச் செல்லுங் காலத்தும் அதனிடை இணைக்கப்பட்ட நாட்டுக் கொடிக்கு வீரர்கள் முதலிடம் தந்து வணக்கம் செய்வது இன்றும் காணப் பெறுகின்ற காட்சிகளுள் ஒன்று.

சங்கு, துந்துபி, தாரை, பேரி முதலான பல்லியங்கள் பல

வற்றை அவனருள் வாய்ப்புப் பெற்றவர்களே தாங்கினுர்கள். அரத்துறை முதல் ஆச்சாள்புரம் ஈருக அனைத்துத் தலங்களுக்கும் முதன்முதல் சுமந்தவர்களே சுமந்து செல்கின்றனர். ஈனமாம் பிறவி தீர ஆச்சாள்புரத்தில் சோதியுளும் கலந்தனர்.

மாறன்பாடியில் அடியவருடன் தங்கியுள்ள சண்பை ஆண்டகையார்க்கும் நெல்வாயினிமலவர் அன்றிரவே கனவில் சென்று, ''நாம் மகிழ்ந்தளிக்கும் அவை கொள்ளலாகும் கொண்டுய்த்தல் செய்வாய்'' என்று தெரிவிக்கின்ருர். தமக்குப் பெருமான் அருளியதைத் தம்முடன் தங்கியுள்ள தொண்டர்க்குச் சம்பந்தர் தெரிவிக்கின்ருர். இருள் நீங்கியது. அஞ்செழுத்தோதி அனைவரும் எழுகின்றனர். காலைக் கதிரவனும் புகலிப் புனிதரைச் சிவிகைமேல் ஏற்றிடக் காதல் செய்பவன் போல் கருங்கடல் மீது தேரேறி வருகின்ருன்.

''ஞானசம்பந்தன் நம்பால் அணைகின்ருன் நீங்கள் நம்பாற் கொண்டசின்னங்களுடன் அவனை எதிர் கொண்டழைமின்'' என்பதற்கேற்ப மறையவர்களும் அடியவர்களும் மாறன்பாடிக்கு சிவிகைகளுடன் வருகின்றனர். சிரபுரப் பிள்ளையாரை வணங்குகின்றனர். ''அரத்துறை ஆதியார் தந்தபேரருள் தாங்குவீர்'' என்கின்றனர். இது கண்ட சம்பந்தர் யாதும் மறுக்காமல், ''மன்றுளார் அருள்' எனநினைக்கின்ருர். 'எந்தையீசன்' '௭ ; திருப்பதிகம் எடுத்து இவ்வருள் வந்தவாறு மற்றெவ்வணமோ என்று போற்றிச் சிவிகையை வலம் வந்து உலகெலாம் உய்ய அஞ்செழுத்தோதி ஏறினுர். இக்காட்சியைச் சேக்கிழார், 'பாற்கடல் வளர் மதி தோற்றியது' போன்று இருந்தது எனச் சிறப்பிக்கின்ருர். தொண்டர்களும், மறையவர்களும், ஏனையோரும் நெருங்கி மகிழ்ச்சியினுல் கை மேற்குவித்து ஆனந்த வெள்ளத்தில் குளிக்கின்றனர். சிவிகை அரன்கோவில் நோக்கிப் புறப்பட்டது.

வையம் ஏழுடன் மறைகளும், நிறை தவத்தோடும் உய்ய ஞான சம்பந்தன் வந்தான் - பாலரு வாயன் வந்தான் -ஓதாதுணர்ந்த முத்தமிழ் விரகன் வந்தான் என எக்காளம், திருச்சின்னம் தாரைகள் எடுத்துச் சொல்லி ஊதுகின்றன. எழுது சொன் மறையாகிய தமிழ் அளிக்கும் ஞானசம்பந்தர் தம களிக்கப் பட்ட சிவிகையில் ஏறி அரத்துறை வந்தணைகின்ருர்.

அரத்துறைக் கோபுர வாயிலைத் தொலைவிலேயே கண்டதும் தனக்கு அளிக்கப்பட்ட சிவிகையினின்று உணர்வறிய மெய்ஞ் ஞானங்கொண்ட ஞானசம்பந்தர்

இறங்கிப் பெருமான் திருமுன் செல்கின்றார். என்னையும் பொருளாக இன்னருள் புரிந்தருளிய அரத்துறைப் பெருமான் பொன்னடித் தலத்தாமரை போற்றுகின்றார். சின்னாள் தொண்டர்களுடன் திருவரத்துறையில் தங்குகிறார். பின்னர் புகலி மேற்செல மனம் வைத்தார். அரத்துறை அடிகளை வணங்கி விடைபெற்றுக் கழலினை உச்சி மேற்கொண்டு நித்திலச் சிவிகையில் ஏறிச் செல்கின்றார்.

அருங்கலக்கோன் என்று அரத்துறைப் பெருமானால் அழைக்கப்பட்ட சம்பந்தர் சிவிகையில் ஏறும் போது அஞ்செழுத்தோதி ஏறுவதும், கோபுர வாயில் சேய்த்தாகக் கண்ட போதே சிவிகையினின்று இறங்குவதும் ஆகிய மரபினைத் தமக்கென்றே வகுத்துக் கொண்டார். இனித் தலங்கள் தோறும் சிவிகையில் செல்லும் போது மேலும் பல மரபுகளை வகுத்துக் கொண்டதை அவரது வரலாற்றில் காணும் போது அரத்துறை அடிகள் அருளிய பேற்றை நினைந்து இன்புறாமல் இருக்க இயலாது. நினைந்து இன்புறுவோமாக.



# இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

### வாந்தி (Vomiting)

1. கிச்சிலி பழச்சாறுடன், சர்க்கரை கலந்து கொடுக்க வாந்தி நிற்கும்.

### வயிற்றுக் கடுப்பு (Dysentry)

2. அன்று பறித்த இளநீரை எலுமிச்சம்பழச்சாறுடன் பருக வயிற்றுக் கடுப்பு குணமாகும்.

### வாய்ப்புண் நீங்க

3. விளாங்காயைப் பச்சடி செய்து உண்டால் வாய்ப்புண் நீங்கும்.

Dr. N. சடையப்பன், S. M. P

உ
சிவ சிவ

# மதுரையில் மகா சிவராத்திரி தேவார விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-ஆவது அதிபர் 'கயிலைமாமுனிவர்'
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் ஆணையின் வண்ணம் நடத்தப் பெறுவது

துந்துபி ஆண்டு மாசி மீ 28 ஆம் நாள்- 12-3-83 சனிக்கிழமை

மாசி மகா சிவராத்திரி

நீல மாமிடற் றால வாயிலான், பால தாயினர் ஞாலம் ஆள்வரே.
ஆட லேற்றினன் கூடலாலவாய், பாடியேமனம் நாடி வாழ்மினே.

—சம்பந்தர்

மாகத்து அபரதிர யோதசியோ டேபதினன்கு
ஏகவா ரத்தின் இசையின்,
அற்றைநிசி யிற்சிவன்தாள் அர்ச்சிக்கப் பாசவிதம்
அற்(று)அமலன் பாதம் அடைவர் - மாசி மகாசிவராத்திரி கல்பம்

திருமுறை வாணர்கள்:

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திருவாளர்கள் டி. எம். விசுவலிங்கம் சபாபதி, சகோதரர்கள்
   திருவாவடுதுறை
2. தேவார இசைமணி
   திரு. ப. இராமச்சந்திர ஓதுவார், விருத்தாசலம்,
3. தேவார இசைமணி
   திரு. ஆ. சோம சுந்தர ஓதுவார்
   ஸ்ரீ காசிமடம் கட்டளை, மதுரை.
4. திரு. மணிகண்ட ஓதுவார், மதுரை.
5. திரு. கோ. வெங்கடராமன் மிருதங்கம், திருப்பனந்தாள்.

ஆணைப்படி:

**முத்து. மெய்கண்டதேவன்,**

மானேசர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

---

குறிப்பு:- மதுரை, ஸ்ரீ மீனாட்சியம்மன் திருமுன்னிலையில் இரவு 8. மணிக்குத் தொடங்கிச் சிவமே நிலவும் ஆடி நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவாணர்கள் திருமுறை ஓதிக் காலை 6-மணிக்கு ஸ்ரீ மீனாட்சியம்மன் திருமுன்னிலையில் நிறைவுசெய்வார்கள்.

உ

Siva Siva

# Thevara Goshti-Mahasivaratri Festival

## KALAHASTI

*Conducted according to the orders of His Holiness*

**Sila Sri Kasivasi Muthukumaraswami**

**Thambiran Swamigal Avergal**

*Head of Sri Kasi Mutt, Tirupanandal(Thanjavur Dt.)*

From 11—3—83 to 16—3—83

The Siva Shrine at Kalahasti is one of the shrines sanctified by the Hymns improvised by the three Great Saiva Saints Thirugnanasambandar, Thirunavukkarasar and Sundarar. A spider, a cobra and an elephant attained salvation by worshipping the Lord and hence the Kshetra got the name Sri Kalahasti. It is one of the Pancha Bhoota Kshetras - Vayulinga where Kannappa Nayanar attained beatitude in six days. In such a famous Kshetra a Thevara Goshti will be conducted for six days from 11—3—83 to 16—3—83 during the Mahasivaratri Festival of Sri Kalahastiswaraswami Devasthanam at Kalahasti and the names of the Thevara Hymnists are given below:-

1. Thiru *RETHINAM PILLAI* Chidambaram.
2. ,, *T. R. SIVAPRAKASAM* Madras.
3. Thevaramani Thiru *CHOCKALINGA OTHUVAR,* Kalahasti.
4. Thiru *K. SUNDARARAMA IYER* Flute vidwan, Thirukadavoor.
5. Thiru *N. HARIHARAN.* Mirutangam Thiruppanandal.

MAY SIVA BLESS ALL

*N. GANGIREDDY*
B. A., B. Ed.,
Asst. Commr. -Executive Officer
Sri Kalahastiswaraswami Devasthanam,
KALAHASTI
(Andra Pradesh)

*K. SUBRAMANYAIYER*
B.A.,
"Thiagaraja Vilasam"
62 Pillaiyar koil street,
Triplicane P. O.
MADRAS-600 005.

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி M. A., திருப்பனந்தாள்.

பல பிறவிகளிலும் பயின்று வந்த இப்பழக்கம் குருவருள் பெற்ற பின்னும் ஒரோவழித் தாக்கச் செய்கின்றது. அதனை முற்றக் கடிய அக் குருவருள் வழிப் பெற்ற அருளுரையே துணை யாகும். சிவஞான போதத்தில் ஒன்பதாம் நூற்பா அமைந்திருப் பதும் ஈண்டு எண்ணற்குரியதாம். பந்தம் – கட்டு: மும்மலக்கட்டு; பௌதிகம் - ஐம்பெரும் பூதத் தொடர்பான உடல். இங்கு - பெருங் காயம். ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியான் இறைவன். அவனது திருப்பெயராக விளங்கும் திருவைந்தெழுத்தும் முதலும் முடிவும் அற்றதாம். பேதித்தல் - வேறுபடுத்தல்: அருள் நெறியினின்றும் வேறுபடுத்தல். ''பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன் பாதம்'' என்ற திருவாக்கும் காண்க.

### திருவைந்தெழுத்தின் பொருளும் கேட்டற்குரியாரும்

91. திருவெழுத்து ஐந்தில்ஆன் மாத்திரோதம் ஆசுஅருள் சிவம்சூழ்
தரநடு நின்றது, ஒன்றும் தன்மையின் தொன்மை யாகி
வரும்மந மிகுதி யாலே வாசியில் ஆசை யின்றிக்
கருவழிச் சுழலும் மாறும் காதலார்க்கு ஓத லாமே.

(தெ-ரை) திரு எழுத்து ஐந்தில் உயிர், மறைப்பாற்றல் ஆணவம் ஆகிய இரண்டிற்கு முன்னும், அருள் சிவம் ஆகிய இரண் டற்கும் பின்னுமாகச் சூழ நடுவில் உள்ளது. அவ்வாறு இடையே நிற்கும் உயிர் தான் சார்ந்த வகையால் ஒன்றியிருக்கும் தன்மையைப் பெறுகின்றது. பண்டுதொட்டு வரும் ஆணவம் மறைப்பு ஆகிய இவற்றின் மேலீட்டால் உலகியற் பொருள்களில் அழுந்தி, அருளிலும் சிவத்திலும் விருப்பின்றிக், கருவழிப்பட்டுப் பிறந்து இறந்து வருந்தும். கருவழிப்பட்ட விருப்பின்றி இறைவன் அருள் வயப்பட்ட விருப்புடை யோர்க்குச் சூக்கும ஐந்தெழுத்தாய திருவெந்தெழுத்தை அருளலாம்.

சிவயநம என்பது சூக்கும பஞ்சாக்கரம் எனப்படும். இதனுள் சிகரம் சிவபரம்பொருளையும், வகரம் அருளையும், யகரம் உயிரையும்

நகரம் மறைப்பாற்றலையும், மகரம் ஆணவ மலத்தையும் குறித்து நிற்கும். இவ்வாற்ருன் இடையில் நிற்கும் உயிர் சிவத்தொடு பொருந்தியவழி அருள் வயப்பட்டும், மலத்தொடு பொருந்தியவழிக் கருவயப்பட்டும் நிற்கும். ஒன்ரும் தன்மை-சார்ந்ததன் வயப்பட்டு நிற்கும் தன்மை 'பதியினைப் போல் பசு பாசம் அநாதி' ஆதலின் 'தொன்மையாகிவரும் மந' என்ருர்.

### திருவைந்தெழுத்தின் பெருமை

92: ஆசுஉறு திரோதம் மேவாது அகலுமா சிவமுன் ஞக
ஓசைகொள் அதனின் நம்மேல் ஒழித்தஅருள் ஓங்கும் மீள
வாசியை அருளும் மாய மற்றது பற்ரு உற்றுஅங்கு
ஈசனில் ஏக மாகும் இதுதிரு வெழுத்தின் ஈடே.

(தெ-ரை) ஆணவமும் அதனெடு கூடிநிற்கும் மறைப்பாற்றலும் பொருந்தாது நீங்குமாறு சிகர வகரங்களை முன்ஞக வைத்து ஓதப் பெறும் திருவெந்தெழுத்தை எண்ணுவாயாக. அவ்வாறு எண்ணி ஞல் நகாரமாகிய மறைப்பாற்றல் அதன் பின்னுள்ள மகாரமாகிய ஆணவ மலத்தை ஒழித்து அருளாற்றலாய் விளங்கும். பின் வகார மாகிய அவ்வருளாற்றல் சிகாரமாகிய சிவபரம் பொருளை அடை விக்கும். அருளுணர்வு மிகுந்த உயிர் அவ்வருளையே பற்றுக் கோடாகக் கொண்டு அதனுள் அடங்கி அதுவேயாய்ச் சிவபரம் பொருளில் ஒன்றுபடும். இது திருவைந்தெழுத்தின் பெருமையாகும்.

ஆசு - ஆணவம். இதனைக் குறிப்பது மகரமாகும். அதனெடு பொருந்தியிருப்பது நகரமாகும். அதுவே மறைப்பாற்றலைக் குறிப் பதாகும். ந மேல் – மறைப்பாற்றலுக்குப் பின்ஞக விளங்கும் மலம். மா+ய=மாய: பெருமை பொருந்திய உயிர். ஈடு - பெருமை.

### சீவன் முத்தரது இயல்பு

93: தீங்குஉறும் மாயை சேரா வகைவினை திரிவிதத்தால்
நீங்கிட நீங்கா மூல நிறைஇருள் இரிய நேயத்து
ஓங்குஉணர்வு அகத்து அடங்கி உளத்துள்இன்பு ஒடுங்க நேரே
தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையின் துகளி லோரோ.

(தெ-ரை) தளையின் நீங்கிய சீவன் முத்தர், குற்றமுடைய மாயையின் செயல்கள் வந்து சேராதவாறு பழவினை முதலிய மூவினை

களும் மூவகையால் நீங்க, விட்டு அகலாத மூலமலமாகிய பேரிருளும் அகல, சிவபரம்பொருளின் பேரொளியான அருளில் தாம் அடங்கி, அவ்வருளொடு பிரிவின்றி இயைந்திருக்கும் சிவபரம்பொருளால் தாங்கப் பெற்று, தம் அறிவில் பேரின்பம் வந்து உறுமாறு மல வாதனை சிறிதும் இன்றி இன்புறுவர்.

மாயை மயக்கமும் செய்யுமாகலின் 'தீங்குறு மாயை' என்றார். பழவினை அருட்குரவரின் தீக்கையால் நீங்கும். நுகர்வினை துய்த்த தலால் நீங்கும்; வருவினை அருள்வழி நிற்றலால் நீங்கும். வீடு பேற்று நிலையிலும் நீங்காமை குறித்து 'நீங்கா மூல நிறையிருள்' என்றார். ஏகத் தொன்மை - ஒன்றாய சிவபரம்பொருள்; தூங்குவர்— இன்பில் அழுந்துவர்;

இதுவுமது

94. குறிப்பிடம் காலம்திக்கு ஆசனம் கொள்கைகுலம் குணம்சீர்
சிறப்புஉறு விரதம் சீலம் தவம்செபம் தியானம் எல்லாம்
மறுத்துஅற ஒழிதல் செய்தல் மருவிடா மன்னு செய்தி
உறக்குஉறு பவர்போல் வாய்மை ஒழிந்தவை ஒழிந்து போமே

(தெ-ரை) ஒன்றி உணர்தற்கு உரிய இடம், இன்ன காலத்தில் இது செய்ய வேண்டும் என வரையறைப்படுத்தி உணரும் செயற் பாடு, இறைவனை எண்ணுதற்குரிய திக்கு வரையறை, இருந்து எண்ணுதற்குரிய இருக்கை வரையறை, சமயக் கோட்பாடுகள், குல விருப்பம், சமய ஒழுக்கம், சமய வேடம் பற்றிய பற்று, விரதங்கள், பொறுமை அடக்கம் முதலிய நல்லொழுக்கங்கள், தவம், ஐந் தெழுத்து ஓதுதல், ஒன்றிய உணர்வுடன் எண்ணல் ஆகிய இவை யெல்லாம் தாமாகவே வேண்டாவென வெறுத்தலோ, அன்றி அவற்றைச் செய்தலோ இலவாம். மெய்ப்பொருளாய சிவபரம் பொருளைக் கண்டிருக்கும் செயல் ஒழிய, மேற்கூறியவாறு குறிக் கொண்டு செய்யும் செயல்களெல்லாம் உறங்குபவரின் கைப்பொருள் தாமே நெகிழ்ந்து போதல் போல் சீவன் முத்தருக்கு ஒழிந்து போதற் குரியனவாம்.

இடவரையறை காசி, தில்லை, காவிரிக்கரை முதலியவற்றில் இருந்து செய்ய வேண்டும் என நினைதல்.

இதுவுமது.

95. அகம்புறம் என்று இரண்டால் அருச்சனை புரியும் இந்தச்
சகம்தனில் இரண்டும் இன்றித் தமோமய மாகி எல்லாம்
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல ஞானம்
திகழ்ந்துஅகம் புறம்எனாத செம்மையார் நன்மை யோரே.

(தெ - ரை) அகவழிபாடு புறவழிபாடு என்ற இருநிலையில் வழிபாடாற்றி அவற்றிற்குத்தகப் பயன் பெற்று வரும் இவ்வுலகில், அவ்விரு வழிபாடுகளுமின்றி அறியாமையே தமக்கு வடிவாகி வினைக்கீடாக நிகழ்வனவெல்லாம் நிகழ்ந்திடத் தாம் அவற்றைக் கருதாது தாம் கருதிய ஒன்றிலேயே மகிழ்வுற்று வாழும் உலக மக்களைப் போல, அருளுணர்வு மீதூர்ந்த சீவன்முத்தரும் உலகியற் பொருள்களில் இது அகம் என்றும் இது புறம் என்றும் பிரித்து உணராது அனைத்தையும் ஒருதன்மைத்தாகக் கண்டு, தாம் பெற்ற ஞானமே தமக்கு வடிவாய், நுகர்வினைக்கீடாக நிகழ்வனவெல்லாம் நிகழத் தாம் அவற்றில் தோயாது, தம் உணர்வு ஒன்ற எண்ணி மகிழும் சிவபரம் பொருளிலேயே ஒருமையுற்று அழுந்தி, அப் பேற்றின் வழிக் கிடைக்கும் பேரின்பத்தில் திளைத்து நிற்பர்.

ஆணவ இருளின் வயப்பட்டு அதனுள் அழுந்தி நிற்பார் அதன் பயனாகப் பெறும் உலகியல் இன்பத்தில் திளைத்தல் போல, அருளுணர்வுடைய சிவன்முத்தர் தாம் பெற்ற அருளுணர்வின் வயத்தராகி அதனுள் அழுந்தி இன்புறுவர் என்பதாம். தமம் — ஆணவம். மயம் — வடிவு.

### ஞானத்தில் யோகம்

96: அண்டம் மேவிட அனைத்தும் அனைத்தையும் அண்டம் மேவிக்
கொண்டல்போல் எவையும் ஞானக் குறைவிலா நிறைதலாலே
கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினால் காணில் தானே
அண்டநா யகனார் மேனி ஆனதேல் ஐயம் இன்றே.

(தெ - ரை) நிலம் முதலிய நாற்பொருள்களும் வானைப் பொருந்தி நிற்ப அவ் வானம் அவை அனைத்தையும் தன்னகத்து அடக்கி நிற்றல் போல, அனைத்துப் பொருள்களிலும் முழுமையாக இறையருள் கலந்திருத்தலின் தாம் காணும் பொருளையும் அவ்வருள் வடிவாகக் காணின் இறைவனும் அவ்வடிவில் நிற்பன். சீவன் முத்தர்கள் இவ்வாறு அனைத்தையும் சிவமாகக் கண்டு நிற்றலின் அவர் ஞான நிலையை அடைதலின் ஐயமின்றாம்.

எனவே இறையருளில் ஒன்றி நிற்கும் ஞானியர் தாம் காண்ப தெல்லாம் சிவமாகக் காண்பர் என்பதும், அதனால் அவர் பெறும் இறையருள் ஞானம் அவரினின்றும் வழுவுதலில்லை என்பதும் விளங்கும். இதனை ஞானத்தில் யோகம் என்பர்.

## ஞானத்தில் கிரியை

97: மண்முதல் கரணம் எல்லாம் மறுஅசத் தாக்கி ஞானக்
கண்ணினில் ஊன்றி அந்தக் கருத்தினுல் எவையும் நோக்கி
எண்ணி அஞ்செழுத்து மாறி இறைநிறை உணர்ந்து போற்றல்
புண்ணியன் தனக்கு ஞான பூசையாய்ப் புகலும் அன்றே;

(தெ - ரை) நிலம் முதலிய தத்துவங்கள் எல்லாம் தனக்கு வேருனதும் அறிவற்றதுமாம் எனக் கண்டு அவற்றை நீக்கி அவ்வாறு காணச் செய்த அருளில் நிலைபெற்று நின்று அவ்வருட் கண்ணுலேயே அனைத்தையும் பார்த்துத், திருவைந்தெழுத்தை வீடு பேற்றிற்கு இலக்காகுமாறு எண்ணிப், பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்து நிற்பது சிவபரம் பொருளே என்னும் நிலையை உணர்ந்து வழுத்துதல், அப் பரம்பொருளுக்குச் செய்யும் ஞான வழிபாடென அருள்நூல்கள் இயம்பும்.

நிலம் முதலிய முப்பத்தாறு தத்துவங்களும் தன்னின் வேருனவை, அறிவற்றவை எனக் கண்டு அவற்றின் நீங்கல் பூதசுத்தி எனப்படும். திருவருளையே தனக்கு ஆதாரமாக நினைதல் ஆன்ம சுத்தி எனப்படும். அருட்கண்ணுல் அனைத்தையும் காண்டல் திரவிய சுத்தி எனப்படும். வீட்டிற்கு இலக்காக்கும் திருவைந்தெழுத்தை எண்ணுதல் மந்திரசுத்தி எனப்படும். இயங்கியற் பொருள் நிலையியற் பொருள் ஆகிய அனைத்தினும் கலந்து நிற்பது பரம்பொருளே எனக் காண்டல் இலிங்க சுத்தி எனப்படும். இவ்வைவ்வகைத் தூயநிலையிலும் திளைத்து மகிழ்தல் ஞானத்தில் கிரியை எனப்படும். அசத்து— நிலையற்றது. வீட்டிற்கு இலக்காக்கும் திருமந்திரம், காரண பஞ்சாக்கரம் எனப்படும்.

## அணைந்தோர்க் குரிய சரியை

98. தொண்டர்கள் தாமும் வானோர் தொழும் திருமேனிதானும்
அண்டரும் கண்டிலாத அண்ணலே என வணங்கி
வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குளறமெய்யே
கண்டு கொண்டிருப்பர் ஞானக் கடல் அமுது அருந்தினேரே

(தெ - ரை) ஞானமாகிய கடலில் பேரின்பமாகிய அமிழ்தை நுகரும் சீவன்முத்தர்கள், சிவத் தொண்டர்களும், தேவர்களும் வணங்கி மகிழும் சிவலிங்கமும் இறைவனின் வடிவெனக் கருதி, விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா விழுப் பொருளே என வணங்கி, விழிகளில் வெண்முத்தென நீர்ததும்பி வழிய, மொழி தடுமாற மெய்ப்பொருளாகிய சிவத்தையே கண்டு கொண்டிருப்பர்.

இவ்வாறு வழிபடுவதைச் சிவன்முத்தர் செய்யும் சரியை என்பர்.

நுவன்றவாறு

99. நிலவு உலோகாயத ஆதி நிகழ்சிவாத்து விதஅந் தத்துள்
குலவினர் அளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத்
தலைதரு பொருளாய் இன்பாய்த் தாவுஇல்சற் காரி யத்தாய்
மலைவறும் உணர்வால் பெத்த முத்திகள் மதித்தாம் அன்றே.

(தெ - ரை) விளங்குகின்ற உலோகாயதம் முதல் சிவாத்தித விதம் ஈறாக உள்ள சமயக் கோட்பாடு உடையவரின் பொருள் அளவைகளைத் தழுவாத கோட்பாடுடையதாய், வேத முடியில் தெரியப்படும் பொருளாய், நிலையாய பேரின்பத்ததாய், குற்றம் தீர்த்த உள்பொருளாய், ஐயத்தின் நீங்கித் தெளியும் உணர்வின தாய் உள்ள சைவசித்தாந்தச் செம்பொருளை உணர்ந்த அறிவால், கட்டுநிலை வீட்டுநிலை ஆகிய இரண்டின் இயல்பையும் வரையறுத் துக் கூறினோம்.

வேதத்தலை - வேதத்தின் முடிபு. தாவு இல்—கேடு இல்லாத. சற்காரியம்—உள்ள ஒன்றிலிருந்தே ஒன்று தோன்றும் என்னும் கொள்கை, பெத்தம்—கட்டுநிலை.

நூல் கேட்டற் குரியார்

100. திருவருள் கொடுத்து மற்றுஇச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால் விளம்பிய ஏதுநோக்கிப்
பெருகிய உவமை நான்கின் தன்வயில் நிறுவிப் பின்முன்
தருமலைவு ஒழியக் கொள்வோன் தன்வயின் சாற்ற லாமே,

(தெ - ரை) மெய்நூல்களின் விரிந்த பொருளை தெளிந்து உணரு மிடத்துக் கூறப்பெற்ற காரண காரிய முறைகளை உற்றுநோக்கி, நால்வகை உவமைகளின் வாயிலாகப் பொருளியல்பு உணர்ந்து, முன்னும் பின்னும் உள்ள கருத்துக்களை முரண்இன்றி உணரத்தகும் தகுதியுடையயோர்க்குத் தீக்கை வழங்கி இச்சிவப்பிரகாசம் என் னும் நூலையும் அருளத் தக்கதாம்.

திருவருள் கொடுத்து—குருமூர்த்திகளின்வழி தீக்கையை வழங்கி விரிவது தெளியுமாற்றால்—(உண்மை நூலின்) விரிந்த பொருளைத் தெளிந்துணருமிடத்து. விளம்பிய ஏது—சொல்லப்பட்ட பொருளின் காரணகாரிய இயைபு. இயல்பேது காரிய ஏது அநுபலத்தியேது எனினும் ஆம். உவமை நான்கு—வினை பயன் மெய் உரு என்பன.

சிவப்பிரகாசத் தெளிவுரை நிறைவு பெற்றது.



# திருக்கணித பஞ்சாங்கம்

### தி. கி. நாராயணசாமி, கடலூர்-1

துந்துபி ௵ மாசி ௴ (1983 - பிப்ரவரி௴ - மார்ச்௴)

திதி, நட்சத்திர காலம், முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலம்வ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (13—2—83) | ஞாயிறு | பிரதமை நாள் முழுவதும் | அவிட்டம் 19-05 |
| 2 | (14—2—83) | திங்கள் | பிரதமை 8-03 | சதயம் 21-25 |
| 3 | (15—2—83) | செவ்வாய் | துதியை 9-42 | பூரட்டாதி 23-23 |
| 4 | (16—2—83) | புதன் | திரிதியை 10-59 | உத்திரட்டாதி 24-57 |
| 5 | (17—2—83) | வியாழன் | சதுர்த்தி 11-50 | ரேவதி 26-07 |
| 6 | (18—2—83) | வெள்ளி | பஞ்சமி 12-14 | அசுவணி 26-50 |
| 7 | (19—2—83) | சனி | சஷ்டி 12-09 | பரணி 27-03 |
| 8 | (20—2—83) | ஞாயிறு | சப்தமி 11-32 | கார்த்திகை 26-44 |
| 9 | (21—2—83) | திங்கள் | அஷ்டமி 10-23 | ரோகிணி 25-53 |
| 10 | (22—2—83) | செவ்வாய் | நவமி 8-40<br>தசமி 30-26 | மிருகசீரிஷம் 24-30 |
| 11 | (23—2—83) | புதன் | ஏகாதசி 27-44 | திருஆதிரை 22-37 |
| 12 | (24—2—83) | வியாழன் | துவாதசி 24-39 | புனர்பூசம் 20-21 |
| 13 | (25—2—83) | வெள்ளி | திரயோதசி 21-18 | பூசம் 17-48 |
| 14 | (26—2—83) | சனி | சதுர்த்தசி 17-51 | ஆயில்யம் 15-07 |
| 15 | (27—2—83) | ஞாயிறு | ○பௌர்ணமி 14-28 | மகம் 12-28 |
| 16 | (28—2—83) | திங்கள் | பிரதமை 11-19 | பூரம் 10-02 |
| 17 | ( 1—3—83) | செவ்வாய் | துதியை 8-35 | உத்திரம் 8-01 |
| 18 | ( 2—3—83) | புதன் | திரிதியை 6-26<br>சதுர்த்தி 29-01 | அஸ்தம் 6-34<br>சித்திரை 29-51 |
| 19 | ( 3—3—83) | வியாழன் | பஞ்சமி 28-26 | சுவாதி 29-57 |
| 20 | ( 4—3—83) | வெள்ளி | சஷ்டி 28-45 | விசாகம் நாள்முழுதும் |
| 21 | ( 5—3—83) | சனி | சப்தமி 29-54 | விசாகம் 6-55 |
| 22 | ( 6—3—83) | ஞாயிறு | அஷ்டமி நாள்முழுதும் | அனுஷம் 8-41 |
| 23 | ( 7—3—83) | திங்கள் | அஷ்டமி 7-47 | கேட்டை 11-08 |
| 24 | ( 8—3—83) | செவ்வாய் | நவமி 10-11 | மூலம் 14-04 |
| 25 | ( 9—3—83) | புதன் | தசமி 12-52 | பூராடம் 17-13 |
| 26 | (10—3—83) | வியாழன் | ஏகாதசி 15-34 | உத்திராடம் 20-21 |
| 27 | (11—3—83) | வெள்ளி | துவாதசி 18-05 | திருஓணம் 23-16 |
| 28 | (12—3—83) | சனி | திரயோதசி 20-15 | அவிட்டம் 25-51 |
| 29 | (13—3—83) | ஞாயிறு | சதுர்த்தசி 21-58 | சதயம் 27-59 |
| 30 | (14—3—83) | திங்கள் | ●அமாவாசை 23-13 | பூரட்டாதி 29-41 |

# திருவிளையாடல் புராணம்

## உரைநடை

### இறைவராகிய வலைஞர் படகில்சென்று மீனைப்பிடித்தல்

ஆண் சிங்கத்தை ஒத்த வலைஞனுகிய பெருமான், தம்முடன் வலைஞன் கோலத்தில் வந்த சிவகணநாதனின் தோள்மீதிருந்த மாலை போல் அசையும் விளிம்புகளில் கோத்த ஈயமணிகள் பொருந்திய வலையை வாங்கிக்கொண்டு, கடலைக் கிழித்துச் செல்லும் ஒரு படகின் மீது பாய்ந்து சென்று, நன்ருகக் குறி பார்த்துத் தம் உடலினைத் திருக நின்று, விளிம்பிற் பொருந்திய மணிகள் ஒளிவீச, வீசும் வேகத்தில் எங்கும் ஒலிபரவ வீசினுர். பாம்பின் வாயில் அகப்பட்ட மீனைப்போல் இறைவன் வீசிய வலையின்கண் சுருமீன் சிக்கிக் கொண்டது. குற்றமற்ற அடியார்களின் அன்பாகிய வலையின்கண் அகப்படும் பெருமான்[1] தாவி வீசிய வலையினில் சிக்கிய சுருமீனை இழுத்துக் கடற்கரையின் மேல்போட்டார்[2]. அப்போது வலைஞர்கள், மதுவினில் மொய்க்கும் வண்டுகளைப்போல் நெருங்கிவந்து கூடி ஆரவாரித்து, ''வலைஞர்கோனும் அவன் கிளைஞரும் கூடிப் பலநாள் வரையில் முயன்று வலைவீசியும் அகப்படாத மீனினை இந்த இளைஞன் ஒருவனே ஒருமுறை வலையினை வீசிச்சுருக்கி இழுத்துக் கரையி விட்டான்! ஆதலால் இவனே நம் குலத்திற்குரிய ஒரு தெய்வ மகன் ஆவான்'' என்று கூறினர்.

---

1. இங்கு, ''பத்தி வலையிற் படுவோன் காண்க'' (திருவாசகம் – திருவண்டப் பகுதி) என வரும் அடி சிந்திக்கற்பாலது.

2. இங்கே, ''அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி'' (திருவாசகம்–போற்றித் திருவகவல்) எனவும், ''ஆரா வமுதாய் அலைகடலாய் மீன்விசிறும், பேராசை வாரியனை'' (திருவாசகம் – திருவம்மானை) எனவும் ''மணிவலை கொண்டுவான் மீன்விசிறும் வகையறி வாரெம் பிராஞவாரே'', ''ஏதில் பெரும்புகழ் எங்க ளீசன் இருங்கடல் வாணற் குத் தியிற் ருேன்றும், ஒவிய மங்கையர் தோள்புணரும் உருவறி வாரெம் பிராஞ வாரே'' (திருவாசகம் – திருவார்த்தை) எனவும், ''மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே'' (திருவாசகம் - திருப்படையாட்சி) எனவும் வரும் அடிகள் கருதற்பாலன;

பரதவர் தலைவன் தன் மகளை வலைஞனுக்கு மணம்புரிதல்

தாழைகள் நிறைந்த கடற்கரைத் தலைவன், மனமிக மகிழ்ந்து, நெய்தனிலப் பறை ஒலிக்க, வலைச்சியர் குரவையாட, வலைஞராய் வந்த பெருமானுக்குத் தன் மகளைத் திருமணம் செய்துகொடுத்தான்.

சிவபெருமான் உமாதேவியாரோடு காட்சியளித்தல்

அப்போது திருமணக் கோலம் பூண்ட வலைஞராகிய சிவபெருமானும், வலைஞர்கோன் மகளாகிய உமாதேவியாரும் விண்ணில் இடபாரூடராய் எழுந்தருளித் தமக்குரிய சகளத் திருமேனியுடன் தோன்ற, கடற்கரையில் கிடந்த சுருமீனாகிய திருநந்தி தேவரும் பழைய வடிவத்தைப் பெற்றுத் திருமுன் வந்து தோன்றினார். பரதவர் தலைவன், வெள்ளிய இடபவூர்தியில் காட்சியளித்த சிவபெருமான்[1] உமாதேவியார் என்னும் இருவருடைய கிருபாநோக்கம் பெற்றமையால், முன்வினைச் சார்பினால் பந்தித்த இப்பிறவியின் சிற்றறிவு ஒழிந்து நல்லறிவு தோன்றச் சிவபெருமானுடைய திருவடிக்கீழ் வீழ்ந்து வணங்கி, ''உயிர்களிடத்தில் இரக்கமில்லாத இழிந்த பிறவியை எடுத்துழலும் அறிவிலியாகிய என்னை இன்று காத்தற்பொருட்டு, என்னைப்போலவே வடிவந்தாங்கி வந்த அருளுருவே! போற்றி! பவளம் போன்ற சிவந்த வாயினையுடைய அம்மையைத் திருமணம் புரிந்து, என் பாசம் ஒழியுமாறு வெள்ளிய விடையின்மேல் நின்று காட்சி தந்தருளிய கருணையே! போற்றி!''

இரக்கமில் இழிந்த யாக்கை எடுத்துழல் ஏழை யேனைப்
புரக்கஇன்(று) என்போல் வந்த புண்ணிய வடிவம் போற்றி!
அரக்கெறி பவளச் செவ்வாய் அணங்கினை மணந்(து) என்பாசங்
கரக்கவெள் விடைமேல் நின்ற கருணையே போற்றி! (என்றான்)

என்று கூறித் துதித்தனன்.

சிவன் பரதவ ராசனுக்கருளி உத்தரகோசமங்கை அடைதல்

சோமசுந்தரக் கடவுள், தம்மைத் துதித்து நின்ற பரதவராசனை நோக்கி, ''அன்பனே! நீ பல நாட்கள் வரை மகப்பேறின்றி வருந்தினது கண்டிரங்கி நாம் உமாதேவியாரை நினக்கு மகளாக அளித்துப் பின், முறைப்படி வந்து மணந்து கொண்டோம்; இனி நீ

---

1. இறைவரின் கருணை நாட்டத்தால் பிறவிச் சார்பு நீங்குதலை, ''அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்தித், தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட்டகல'' எனவரும் பெரிய புராண அடிகளாலும் அறியலாம்.

இந்நிலவுலகினில் குபேரனைப்போல் பல போகங்களை அனுபவித்து வாழ்ந்து பின் நமது சிவலோகத்தை வந்து அடைவாயாக[1]'' என்று திருவருள் புரிந்து திருநந்திதேவரோடும் அடியார் கூட்டத்தோடும் [2]உத்தரகோசமங்கை என்னும் தலத்தை அடைந்தருளினர்.

இறைவன் உமாதேவியாருக்கு வேதங்களை உபதேசித்தல்

சிவபெருமான் உத்தரகோசமங்கையில் எழுந்தருளியிருந்த உமா தேவியார் வணங்கிக் கேட்ப, வேதத்தின் இரகசியப் பொருளை யெல்லாம் ஒருசேரத் திரட்டித் திருப்பாற் கடலில் தோன்றிய அமுதத்தினைப்போல் அம்மையாருக்கு உபதேசித்தருளினர். அப்போது தம்மிடம் அன்புகொண்ட அறுபதினாயிரம் சிவனடியார்களுக்கும் சிவயோகி களுக்கும் வேதப் பொருளை உபதேசித்தருளி அவர்களுடைய பற்றினை ஒழித்து, வீடு பேற்றை அருளினர்; பிறகு அங்கயற்கண் அம்மை யாரொடும் மதுரையினை அடைந்தருளினர்.

செய்யுள்—64

ஆகச் செய்யுள்—2712

## 58. வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்

திருவாதவூரின் சிறப்பு

ஒருவனைப் பற்றிய வறுமையினையும் அவனால் பிறர்க்கு ஆகும் பயனையும் ஆராய்ந்து வழங்குபவர்போல, வயல் குளம் ஏரி முதலிய நீர் நிலைகளை நிரம்பச் செய்து, அதனால் அறத்தினைப் பெருக்கி, ''உலகினைச் சூழ்ந்துள்ள பெருங் கடல் ஒருவர்க்கேனும் பயன்படாத உவர் நீரையுடையது'' எனக் கருதி அதில் பாய்ந்தறியாத நீரினை யுடைய வையையாற்றின் கரையினில் திருவாதவூர்[3] என்னும் ஒரு திருப்பதி உள்ளது. உடலினின்றும் நீங்காத உயிர்போல அந்நகர் முழுதும் திருவிழாக்கள் நீங்கா; வீடுகள் அனைத்தினும் விருந்துகள்

---

1. இங்கு முதனூலில் இறைவன் பரதவ ராசனுக்கு அப்பொழுதே சாரூபங் கொடுத்து விமானத்திலேற்றிக் கயிலாய மலைக்கு அனுப்பினர் எனக் கூறப்பட்டுள்ளது.

2. உத்தரகோசமங்கை - இஃது இராமநாதபுரம் இரயில்வே நிலை யத்திலிருந்து தெற்கே சுமார் ஏழு மைலில் உள்ளது.

3. இத் திருவாதவூர் மதுரைக்கு வடகிழக்கே சுமார் பன்னிரண்டு மைலில் உள்ளது

நீங்கா; அங்கு மகிழ்ச்சியை ஊட்டும் பிள்ளைகள் நீங்கா; பாடசாலைகள் எங்கும் வேதங்களின் ஒலிகள் ஒழியா; நாடக சாலைகள் எங்கும் மத்தள ஒலிகள் ஓயா; சோலைகள் அனைத்தினும் மேகங்கள் நீங்கா; வயல்கள் எல்லாவற்றினும் உழவுத் தொழில்கள் ஓயா.

### திருவாதவூரர் தன்மை

இவ்வாறு வளம் நிறைந்த திருவாதவூரிலே [1]அமாத்தியர் மரபினிலே அரிய வேத நெறியும் சிவாகமத் துறையும் விளங்கவும், திருமால் வஞ்சனையினால் இட்ட புத்த மத இருள் சிதறி ஓடவும், சிவபெருமான் திருவருளால் இள ஞாயிற்றினை ஒத்த ஒருவர் வந்தவதரித்தார்.[2] அவருக்குத் திருவாதவூரர் என்ற பிள்ளைத் திருநாமம் இட்டனர். அவர் வேத முறைப்படி கர்ணவேதனம் முதலிய மற்றைச் சடங்குகளெல்லாம் நிறையப் பெற்று இளம்பிறை வளர்வதுபோல வளர்ச்சியடைந்தார். வேத முதலான அறுபத்து நான்கு கலைகளையும் பதினாறு வயதளவில் கற்றுணர்ந்தார். இத் திருவாதவூரருடைய கல்வித் திறமை முதலியவற்றை அறிந்தவர் போய்ச் சொல்ல அரிமர்த்தன பாண்டியன் அதனைக் கேட்டு அவரைத் தன்பால் வரவழைத்து, அவர் உள்ளம் மகிழுமாறு பல வரிசைகள் அளித்துச் [3]சிறப்புச் செய்து, அமைச்சர் பதவியினையும் அளித்தான். திருவாதவூரர் படைக்கலப் பயிற்சி முதலியன உணர்த்தும் நூல்களையும், மனு சாத்திர முதலிய நீதிகளையும் ஐயந் திரிபு நீங்க முற்றக் கற்றுணர்ந்தார்; அதனால் மற்றைய மந்திரிமார் எல்லாரினுஞ் சிறந்து முதன் மந்திரியானார். ஒருவரும் செல்லுதற்கரிய பல்வேறு

---

1. அமாத்தியர் - இவர் மறையோரில் அமைச்சுத் தொழில் பூண்டு வரும் ஒரு குடியினர். அமாத்தியம் - நேபாளத்து அருகிலுள்ள ஒரு தேசம் என்பர்.

2. இவர் சுந்தர நாதர் என்ற ஆதி சைவருக்குப் புதல்வராக அவதரித்தவர் என முதனூல் கூறும்; வாதவூரரைத் திருநந்திதேவர் அவதாரம் எனக் கைலாச மான்மியம் கூறுகிறது; ''குடமுழ நந்திசனை வாசகனைக் கொண்டார்'' என்ற அப்பர் தேவாரம் அதனை வலியுறுத்துகின்றது. பிற புராணங்கள் வாதவூரரைக் 'கலைநாதர்' எனவும், உத்தர கோசமங்கைப் புராணம் ஆயிரம் முனிவருள் ஒருவர் எனவும் கூறுகின்றன. திருவாதவூரரின் தந்தை 'சம்புபாதாசிருதர்' எனவும், தாயார் 'சிவஞானவதியார்' எனவும் திருப்பெருந்துறைப் புராணம் கூறும்.

3. இங்குத் 'தென்னவன் பிரமராயன்' என்ற பட்டம் அளித்த சிறப்பாகும்.

தீவுகளில் செங்கோல் செலுத்தும் மன்னரும் தங்கள் தங்கள் நாட்டிலுள்ள அரிய பொருள்களை அனுப்பிப் பாண்டியனுடன் நட்புப் பூண்டு வாழுமாறு வாதவூர் அமைச்சர் செய்து, அரிமர்த்தன பாண்டியனுக்குக்[1] கண்களாகவும் கவசமாகவும் விளங்கி, உலக முழுதையும் தன் கிளையினைப்போலக் கருதி வெண்கொற்றக் குடை நிழலில் உலகத்தைக் காத்து முறை செய்திருந்தார்.

வாதவூரர் பரகதியினை விரும்புதல்

இங்ஙனம் வாதவூரர் அரசியல் நடத்தி வாழும் நாளிலே, ''இஃது உண்மைப் பொருள்; இது பொய்மைப் பொருள்'' என்று உள்ளபடி பகுத்தறியும் உணர்ச்சி அவர் உள்ளத்திலே தோன்றியது; இம்மை மறுமை இன்பங்களில் வெறுப்புக் கொண்டு மனத்தூய்மை யுடையராய் வீடடையும் நெறியினையே ஆராய்வாராயினர்:

''பௌத்தம் முதலாகிய புறச் சமய நெறிகளும் வேதங்களைத் தழுவிய அகச் சமய நெறிகளும் மனத்தின் மாசினைப் போக்கி இறைவன் திருவருளைத் தெளிவுறுத்த மாட்டா: அதனால், சடமாகிய ஆணவப் பிணிப்பு நீங்காது; ஆகவே, வீடுபேறு அடைதல் இல்லையாம். அன்பு செய்து இறைவன் திருவருளைப் பெற்ற அடியார்களுக்கன்றி ஏனையோர்க்கு வீடுபேறு கிட்டுவது அரிது என்று மறைகள் கூறும்: அவ்வேதத்தின் உண்மைப் பொருளின் தெளிவையெல்லாம் [2]சத்தி நிபாதம் அடைந்த பரிபக்குவர்க்குச் சிவாகமங்கள் உய்த்துணர்த்தும் என்று மெய்யுணர்ந்தோர் கூறுவர். வேத முடிவினும், ஆகமத்தின் முடிவினும் எய்தும் பொருள்கட்குத் தம்முள் வேற்றுமை இல்லை[3];

---

1. அமைச்சர், அரசனிடத்துத் தீய வொழுக்கங் காணில் இடித்துரைத்து நன்னெறியில் செலுத்துதலால் கண்ணும், தெய்வத்தால் வரும் இடையூறுகளைச் சாந்தியாலும், மக்களால் வரும் இடையூறுகளைச் சாமம் முதலிய உபாயங்களாலும் போக்குதலால் கவசமும் போல்வர்.

2. சத்திநிபாதம் - (சத்தி -சிவசத்தி; அருள். நிபாதம்-பதிதல்.) திருவருட் சத்தி பதிதல். இது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற நான்கு வகைப் பக்குவங்களாம்.

3. இங்கே ''வேதமோடாகமம் மெய்யாம் இறைவனூல், ஓதும் பொதுவுஞ் சிறப்புமென்றுள்ளன, நாதன் உரையவை நாடில் இரண்டந்தம், பேதமதென்பர் பெரியோர்க் கபேதமே'' எனவரும் திருமந்திரச் செய்யுள் கருதற்பாலது.

அவற்றை வேற்றுமையுள்ளனவாய்க் காட்டுகின்ற மாறுபாட்டினை ஒழித்து, ஆணவமலக்கட்டினைப் போக்கி உடையானாகிய தன்னையும் உடைமைப் பொருளாகிய என்னையும் அறிவிக்கின்ற ஞான வடிவினனாகிய குருநாதன் வருவது எப்பொழுது? குற்றமற்ற பேரன்பிற்கு எளிதே வந்தருளும் கருணையினையுடைய ஞானாசிரியனின் அருளால் அன்றி, இக்கொடிய பாசமாகிய கடலை நூற்கேள்வியால் கடக்க எண்ணுதல், கடலினை மரக்கலத்தினாலன்றிக் கையினால் நீந்திக் கடக்கக் கருதுதலை ஒக்கும்'' என்று இவ்வாறு எண்ணினார்.

கரவி லாதபே ரன்பினுக்(கு) எளிவருங் கருணைக்
குரவ னார்அருள் அன்றிஇக் கொடியவெம் பாசம்
புரையில் கேள்வியால் கடப்பது புணையினால் அன்றி
உரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ(து) ஒக்கும்.

இறைவனிடம் பேரன்பு கொள்ளுதல்

பிறகு திருவாதவூரர் வீடுபேற்றினை அடையவேண்டும் என்னும் பேராசையினால் கட்டுண்டு வேதாகமாதி சாத்திரங்களில் வல்ல பெரியோர்கள் தம்மிடத்து வருந்தோறும், தாம் அவற்றை உணர்ந்தாரிடம் சென்று அவர்களோடு கலந்து அளவளாவி மெய்ப்பொருளை ஆராய்ந்தார். இப்படி அளவிறந்த அறிஞரிடத்து ஆராய்ந்தறிந்த பொருள்களெல்லாம் நீர் வேட்கையைத் தணிப்பதற்குக் கடல் நீரைப் பருகியவரின் வேட்கை தணியாதவாறுபோல[1] மனத்தின்கண் அமைவுறாமல், கள்ளக் காதலனிடத்து அன்புவைத்தொழுகும் ஒரு பெண்ணைப்போலச் சிவபெருமானிடத்துக் கொண்ட பேரன்பு உள்ளே பதிந்துகொள்ள, அரசனுக்கு உயிரும் கண்ணுமாக இருந்து அமைச்சுரிமையையும் கைவிடாது அரசியல் நடாத்தி வந்தார்.

பாண்டியன் வாதவூரரைக் குதிரை வாங்கிவர அனுப்புதல்

இவ்வாறு ஒழுகும் திருவாதவூரர் ஒருநாள், அரிமர்த்தன பாண்டியனின் சபையிலே போய் நிற்கும்போது, குதிரைப் பந்தியினைக்

---

1. இங்கே, ''சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் தன்வசன, மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமே - ஆர்த்தகடல், தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ, தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு'' என வரும் திருக்களிற்றுப்படியார் வெண்பா கருதற்பாலது.

காக்கும் காவலர்கள் அரசன்முன் வந்து வணங்கி ஒருபுறத்தில் ஒதுங்கி நின்று, ''வெற்றிவேல் ஏந்திய அரசே! நமது குதிரை வெள்ளத்திலே இறந்தனபோக ஒழிந்த குதிரைகள் அனைத்தும் நோயுடையனவும் மூப்புடையனவுமாயின; நல்ல குதிரை ஒன்றேனும் இல்லை'' என்று கூறினர். அதனைக் கேட்ட பாண்டியன் வாதவூர் வள்ளலை நோக்கி, ''நீர் இன்று நமது கருவூலத்தைத் திறந்து பெரும் பொருளை எடுத்துக்கொண்டு போய்க் கடற்றுறையில் வந்து இறங்கும் குதிரைகளில் சிறந்தனவற்றைத் தெரிந்து விலைக்கு வாங்கிக் கொண்டு வருக'' என்று கூறி அனுப்பினான். மனம்வேறுபட்டு அமைச்சுத் தொழில் பூண்டொழுகும் திருவாதவூரர், கருவூலத்தினைத் திறந்து, குதிரை வாங்குவதற்கு வேண்டிய பொருளை எடுத்துக்கொண்டு தாழிட்டிறுக்கி வெளியே வந்து அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்.

### வாதவூரர் ஆலவாய் அம்மையப்பரைச் சென்று தரிசித்தல்

அப்போது திருவாதவூரர் குதிரை வாங்குவதற்காகக் கருவூலத்தினின்றும் எடுத்த பொற்சுமைகளை ஒட்டகங்களின் மேல் ஏற்றுவித்து, அவை முன்னே செல்லும்படி அனுப்பிவிட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோவிலுட் சென்று, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, அதன் கரையிலுள்ள சித்தி விநாயகரைப் பணிந்தார்; பின்பு அங்கயற்கண் அம்மையாருடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு, சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கி, ''வெள்ளிமன்றினுள் ஆடியருளிய வள்ளலே! அடியேனுக்கு ஒரு வரம் அருளல் வேண்டும்; அதாவது செல்லும் இப்பொருளனைத்தையும் தேவரீருக்கும் ஐம்பொறிகளையும் அடக்கித் தேவரீரையே விரும்பும் அடியார்கட்கும் பயன்பட வேண்டும்'' என்று வேண்டிநின்று துதித்தார். அப்போது சோமசுந்தரக் கடவுள் திருவருள் போல அர்ச்சகராகிய ஆதி சைவர் ஒருவர் எதிரேவந்து திருநீறு அளித்தார். அதனைத் திருவாதவூரர், ''நமக்கு இதுபோல் நன்னிமித்தம் வேறு இல்லை; இது நாம் அடையக் கருதும் நன்னெறிக்கு ஓர் ஏதுவாம்'' என்று கருதி இருகரங்களினாலும் வாங்கி நெற்றியில் தரித்துச் சோமசுந்தரக் கடவுளிடத்து விடைபெற்றுக் கொண்டு மீண்டார்.

### வாதவூரர் குதிரைவாங்கப் புறப்பட்டுச் செல்லுதல்

அப்பொழுது இன்னிசைக் கருவிகள் முழங்கின; கொடிகள் மேலே எழுந்தன; இரட்டைச் சாமரங்கள் இருபுறமும் துள்ளின; பவளக் காலையுடைய சந்திரவட்டக் குடைகள் நிழல் செய்தன. வாதவூரர் பொற்சிவிகையின்மேல் ஏறிக்கொண்டு சென்றார். இவ்வாறு திருவாதவூரர் வழிக்கொண்டு செல்லும் முன்னரே சோமசுந்தரக் கடவுள்

இவருடைய [1]இருவினையொப்பையும் [2]மலபரிபாகத்தையும் நோக்கிக் குரவனாகிச் சென்று வலிய ஆட்கொண்டு தமது திருப்பணியின்கண் நிறுத்தியருளத் திருவுளங்கொண்டார்; உடனே தமது பெருங் கருணையால் ஒரு அந்தணர் குலத்துக் குரவராகத்[3] திருமேனிகொண்டு திருவடியினை விட்டுப்[4] பிரியாத பல மாணவர்களோடும் திருப்பெருந் துறையின்கண்[5] வந்து ஒரு குருந்த மரத்தின் அடியில் எழுந்தருளியிருந்தார்.

திருவாதவூரர் திருப்பெருந்துறையினை அடைதல்

கடல்போன்ற சேனைகளோடு பிறவிக்கடலைக் கடந்தவராகிய திருவாதவூரர் முல்லை நிலத்தினை அடுத்த பெரிய காடுகள் அளவிறந்த வற்றைக் கடந்து சென்று பெருங் கருணைக் கடலாகிய ஞானாசிரியர் வீற்றிருக்கும் திருப்பெருந்துறையினை நெருங்கினார்; அதன் எல்லையை அணுக அணுக மனத்தின்கண் மகிழ்ச்சிப்பெருக்கு நிறையவும், கூப்பிய கைமலர்கள் தலைமேல் ஏறவும், கண்களில் ஆனந்தக்கண்ணீர் துளிக் கவும், இறைவன் திருத்தொண்டுக்கே தம்மைச் செலுத்தும் மனத் தின்கண் திருவருள் விளையவும் நடந்து சென்றார்.

---

1. இருவினையொப்பு - நல்வினை தீவினைகளிலும் அவற்றின் வினை யாகிய புண்ணிய பாவங்களிலும், இவற்றின் பயனாகிய இன்ப துன்பங் களிலும் ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் இன்றி ஆன்ம அறிவின்கண் ஒப்ப வெறுப்பு நிகழ்தல்

2. மலபரிபாகம் - மலபக்குவம் ஆணவமலம் தனது சத்தி தேய் தற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்றினோடும் கூடுதல்;

3. இங்கு, ''அந்தணனாகி யாண்டுகொண்டருளி, இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்'' (திருவாசகம் - கீர்த்தித்திருவகவல்) எனவும், ''மெய்தரு வேதியனாகி வினைகெடக், கைதரவல்ல கடவுள் போற்றி'' (திருவாசகம்-போற்றித் திருவகவல்) எனவும் வரும் அடிகள் கருதற்பாலன.

4. பல மாணவர்கள் - இங்குத் தொளாயிரத்துத் தொண்ணூற் றென்பது மாணவர்களாம். ''ஆதி நாயகன் ஒன்றொழிந்(து) ஆயிரம் போத மேவும் புதல்வர்கள் தம்மொடும்'' என்பது திருவாலவா யுடையார் திருவிளையாடற் புராணம்.

5. திருப்பெருந்துறை-இத்தலத்தினை வடநூலார் 'மகாதீர்த்தம்' எனவும், 'பிருகத் தீர்த்தம்' எனவும் பெயர் பெறும் என்பர். சுவாமி திருநாமம் 'ஆளுடைய நாயகர்' என்பது. இப்பெயர் வாதவூரரை ஆட்கொண்டருளினமை பற்றி வந்ததாகும். இது பற்றியே திருப் பெருந்துறை, 'ஆளுடையார் கோவில்' என்பதாம். இது தற்போது ஆவுடையார் கோவில் என வழங்குகிறது. இத் தலம் அறந்தாங்கிக்குத் தென் கிழக்கில் சுமார் ஏழு மைலில் உள்ளது.